

“நார்த்தாமலை சிவன் கோவில்களின் அற்புதங்கள் எனும் இந்நூல் நம் புராதனச் சின்னங்களையும் மற்றும் மன்னர்களின் வரலாற்றையும் பேசுகின்றன. விஜயாலய சோழீச்சுரம் கோயில் பிற்காலச் சோழர்களின் அரசியல் நுழைவை வெளிப் படுத்தும் சின்னமாக இருக்கிறது. முத்தரையர்களின் அரசியல் நிகழ்வுகளை வெளிப்படுத்தும் கலைப்பொக்கிஷமாகவும் அமைகிறது. அதோடு, இவ்வூரில் கட்டப் பட்டுள்ள பிற சிவன் கோவில்களும் அதன் வரலாறும் மன்னர்கள் செய்த திருப்பணி களும் வரும் இளம்தலைமுறைகள் தெரிந்து கொள்ள வேண்டிய முக்கியச் செய்திகளாக அமைந்திருக்கின்றன. சுனைத்தண்ணீருக்குள் இருந்து அருள்பாலிக்கும் ஜ்வரகரேஸ்வரர் குறித்த செய்திகள் ஆச்சரியமூட்டுகின்றன.

நார்த்தாமலையில் காணலாகும் தங்கப்புதையல், சித்தன்னவாசல் இருக்கும் இடத்திற்கும் இவ்வூருக்கும் இடையிலான சுரங்கப்பாதை போன்ற வியப்பை அளிக்கும் செய்திகள் இந்நூலில் ஆங்காங்கு கூறப் பட்டுள்ளன. கலைப் படைப்பு குறித்த விவரங்கள், நாம் அனைவரும் தெரிந்து வைத்திருக்க வேண்டிய செய்திகள் ஆகும். அரிய தகவல்கள் பல நிறைந்திருக்கும் வரலாற்று ஆவணமாக இந்நூல் விளங்குகிறது. பேராசிரியர் பாரதிசந்திரன் அரிதின் முயன்று கோயில்கள் குறித்தச் செய்திகளைச் சேகரித்து அழகாக எழுதியுள்ளார்.

முனைவர் 'இளம் அறிஞர்' **சோ. முத்தமிழ்ச்செல்வன்**
தமிழ் உதவிப் பேராசிரியர்
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி





சிவகுரு பதிப்பகம்

சிவகுரு பதிப்பகம் ◆ நார்த்தாமலை சிவன் கோயில்களின் அற்புதங்கள் ◆ பாரதிசந்திரன்

# நார்த்தாமலை சிவன் கோயில்களின் அற்புதங்கள்

## பாரதிசந்திரன்





# நார்த்தாமலை

# "சிவன் கோயில்களின் - அற்புதங்கள்"


**பாரதிசந்திரன்**

**(முனைவர் செ.சு.நா. சந்திரசேகரன்)**





**சிவகுரு பதிப்பகம்**

7/40, கிழக்குச் செட்டி தெரு,
பரங்கிமலை, சென்னை - 600 016.
தொலைபேசி : 98403 42801
E-mail:sivagurupathippagam@gmail.com

**நார்த்தாமலை ''சிவன் கோயில்களின் - அற்புதங்கள்''**

---

**பாரதி சந்திரன்**


| | | |
|---|---|---|
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | ஆய்வுக் கட்டுரை |
| பதிப்பு | : | **முதற்பதிப்பு, செப்டம்பர்,** 2021 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| தாளின் தன்மை | : | 16 கி.கி. வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | டெம்மி |
| எழுத்து | : | 12 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | 96 |
| ஒளி அச்சு | : | **விக்னேஷ்வரா கிராபிக்ஸ்**<br>சென்னை - 600 005. |
| அச்சிட்டோர் | : | **நொவினோ ஆப்செட்**<br>சென்னை - 600 005. |
| விலை | : | **ரூ.** |

வெளியீடு



**சிவகுரு பதிப்பகம்**

7/40, கிழக்குச் செட்டி தெரு,

பரங்கிமலை, சென்னை - 600 016.

✆ : 04422331177/98403 42801

E-mail:sivagurupathippagam@gmail.com

# அணிந்துரை

**முனைவர் ''இளம்அறிஞர்'' சோ.முத்தமிழ்ச்செல்வன்.**
தமிழ் உதவிப் பேராசிரியர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி,
சிவகாசி.

**கோ**யில்கள் நம் முன்னோர்களின் ஆன்மீக அறிவியல் வெளிப்பாடுகளாகக் காணப்படுகின்றன. காலத்தால் தொடர்ந்து தலைமுறை தலைமுறையாக ஆன்மீகமும், அறிவியலும் கடத்தப் படுகின்றன. தமிழகக் கட்டிடக்கலையின் வளர்ச்சியும், சிறப்பும் மிகப் பழமையானவை. அதோடு, அறிவு வயப்பட்டவை. இவ்வாறான கோயில்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் தமிழ்நிலத்தில் புதுமையானதாகவும், மாறுபட்டதாகவும், சிறப்பானதாகவும் அமைந்திருக்கின்றன.

கோயில்களோடு அதைக் கட்டிய மன்னனும், மன்னரின் ஆட்சியும் வரலாறாகிப் பதிவாகின்றன. எனவே, வரலாற்று ஆவன மாகவும் பாதுகாப்புப் பெட்டகமாகவும் கோயில்கள் விளங்கு கின்றன எனலாம். கலையும், கலை சார்ந்த வழிபாட்டு மரபுகளும் குவிந்துகிடக்கும் இடமாகவும் இவைகள் திகழ்கின்றன.

மனம் சார்ந்த, உடல் சார்ந்த உயர்வுக்கு இடம் அளிக்கும் பல்வேறு பரிசோதனைகளும், விடாமுயற்சிகளும் நடக்கும் ஒன்றிணைந்த மருத்துவச் சாலைகளாகவும் கோயில்கள் அமைந்திருக்கின்றன. அபிஷேக நீர், அலங்காரம், தீப ஆராதனை, திருச்சுற்று, பிரசாதம், காந்தச் சிகிச்சை, திருவீதியுலா என்பவை மருத்துவ முறையில் சிலவாகும்.

*‘‘நார்த்தாமலை சிவன் கோவில்களின் அற்புதங்கள்’’ எனும் இந்நூல் நம் புராதனச் சின்னங்களாகவும் மற்றும் மன்னர்களின் வரலாற்றையும் பேசுகின்றன. விஜயாலய சோழீச்சுரம் கோயில் பிற்காலச் சோழர்களின் அரசியல் நுழைவை வெளிப்படுத்தும் சின்னமாக இருக்கிறது. முத்தரையர்களின் அரசியல் நிகழ்வுகளை வெளிப்படுத்தும் கலைப்பொக்கிஷமாகவும் அமைகிறது. அதோடு இவ்வூரில் கட்டப்பட்டுள்ள பிற சிவன் கோவில்களும் அதனின் வரலாறும் மன்னர்கள் செய்த திருப்பணிகளும் வரும் இளம் தலைமுறைகள் தெரிந்து கொள்ளவேண்டிய முக்கியச் செய்திகளாக அமைந்திருக்கின்றன. சுனைத்தண்ணீருக்குள் இருந்து அருள் பாலிக்கும் ஜ்வரகரேஸ்வரர் குறித்த செய்திகள் ஆச்சரியம் ஊட்டுகின்றன.*

*நார்த்தாமலையில் காணலாகும் தங்கப்புதையல், சித்தன்ன வாசல் இருக்கும் இடத்திற்க்கும் இவ்வூருக்கும் இடையிலான சுரங்கப் பாதை போன்ற வியப்பை அளிக்கும் செய்திகள் இந்நூலில் ஆங்காங்கு கூறப்பட்டுள்ளன. கலைப் படைப்பு குறித்த விவரங்கள் நாம் அனைவரும் தெரிந்து வைத்திருக்க வேண்டிய கோவில்கள் குறித்த செய்திகள் ஆகும். அரிய செய்திகள் பல நிறைந்திருக்கும் வரலாற்று ஆவணமாக இந்நூல் விளங்குகிறது. பேராசிரியர் பாரதிசந்திரன் அரிதின் முயன்று கோயில்கள் குறித்தச் செய்திகளைச் சேகரித்து அழகாக எழுதியுள்ளார்.*

*கோயில்கள் சார்ந்த நூல்களில், இன்னும் ஒரு முக்கியமான நூலாக இந்நூல் விளங்கும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. இதுபோல் அழிந்து போகும் நிலையிலுள்ள வரலாறுகள் பதிவு செய்யப்படவேண்டும். வரலாறுகளும் கலைப்பொக்கிஷங்களும் அடுத்தத் தலைமுறைக்குக் கொண்டு செல்ல வேண்டியது நமது கடமையாகும். அதை இந்நூல் நிறைவேற்றும். நூல் வெளியிட்ட பதிப்பகத்தாருக்கும் கடினமாக உழைத்து இந்த நூலைக் கொண்டு வந்திருக்கிறப் பேராசிரியர் பாரதிசந்திரன் அவர்களுக்கும் என் வாழ்த்துக்கள் என்றும் உரியதாகும்.*

*- அன்புடன்,*

*சிவகாசி*
*9360578768*
**முனைவர் சோ. முத்தமிழ்ச்செல்வன்**

## திறனுரை

**முனைவர் மா. அபிராமி**
தமிழ்த்துறைப் பேராசிரியர்,
வேல்டெக் ரங்கா சங்கு கலைக் கல்லூரி,
ஆவடி.

**சை**வசமயம் சிவனை முழு முதலாகக் கொண்ட சமயமாகும். சிவ வழிபாடானது, பண்டு தொட்டே இந்திய உபகண்டத்தில் நிலவி வந்திருக்கிறது. சைவசமயத்தின் காலத்தை வரையறுப்பது மிகக்கடினம். சிந்துசமவெளி நாகரிகம் நிலவிய மொகஞ்சதாரோ ஹரப்பாவில் கிடைத்த தொல்லியல் சான்றுகள் முந்து சிவன் எனச் சிவனைக் குறிப்பிடுகின்றன. சிவனைக் குறிக்கும் பசுபதி முத்திரையும் லிங்கத்தை ஒத்த கற்களும் சுட்டிக்காட்டப்படுகின்றன. வேதங்களிலும், இதிகாசப் புராணங்களிலும் சிவனைப் பற்றி அறிய முடிகிறது.

சைவசமயம், நம் தென்னகத்தில், சோழர் ஆட்சியில் பக்தி இயக்கமாக உருப்பெற்று, நால்வரும், ஆன்றோரும், சான்றோரும் போற்ற வளரப்பெற்றது.

அரசர்கள் பெருமளவில் சிவன் கோயிலைக் கட்டினர். ஏனெனில், சமூகத்தின் தன்னிறைவும், பொருளாதாரமும் கோயில் களைச் சுற்றியே பின்னப்பட்டிருக்கின்றன. அருகில் கல்விச் சாலைகளை அதிகம் அமைக்கவில்லை. அதிகளவில் மருத்துவ மனைகளைக் கட்டவில்லை. பெரிய பெரிய சிவன் கோயில்களை மட்டுமே கட்டினர்.

நான், சமீபத்தில் புலனக்குழு ஒன்றில், அற்புத நிகழ்வுகளை அப்படியே கூறும் செய்தியைப் படித்தேன். அது கோயில்களின்

பெருமையைப் பேசுகிறது. அதனை அப்படியே இங்கு கூறினால் சரியாக இருக்கும் என்று நினைகின்றேன். அதாவது,

உலகத்திலேயே மிகவும் பணக்கார நாடு இந்தத் தமிழ் மண்தான், இங்கு மட்டும் நாற்பதாயிரம் கோயில்கள் உள்ளன. அவ்வளவு கோயில்கள் ஏன்? அவசியம் என்ன?

சோழர் காலத்தில் தமிழ்நாடு தான் உலகத்திலேயே மிகவும் பணக்கார நாடு.

சுமார் 40,000 கோயில்களைச் சோழர்கள் தங்கள் ஆட்சிக் காலத்தில் கட்டினார்கள். அன்று உலகிலேயே உயர்ந்த கட்டிடம் தஞ்சை பெரிய கோவிலும், கங்கை கொண்ட சோழபுரமும் தான்.

அப்போது வட அமெரிக்கா தென் அமெரிக்கா கிடையாது. இலண்டன் ஒரு சிறு மீன்பிடிக்கும் கிராமமாக 1066 -இல் நிறுவப் பட்டது.

தஞ்சைப் பெரிய கோபுரம் முழுவதும் தங்கத்தால் போர்த்தப்பட்டது. இது பற்றிக் கல்வெட்டும் உள்ளது. இந்தத் தங்கப் போர்வை 1311 - ஆம் வருடம் மாலிக்காபூரின் படைகளால் கொள் ளையடிக்கப்பட்டு, 500 யானைகள் மேல் எடுத்துச் செல்லப்பட்டது.

இவ்வளவு கோவில்கள் கட்டுவதற்கு எங்கிருந்து பணம் வந்தது?

எல்லாம் கடல் வாணிபம் மற்றும் ஏற்றுமதிதான். ஜப்பான் நாட்டில் தங்கச் சுரங்கம் கிடையாது. ஆனால் ஏற்றுமதி வியாபாரம் மூலம் அவர்களுக்குத் தங்கம் கிடைக்கிறது. அதே போல் சோழ நாட்டில் தங்கச் சுரங்கம் கிடையாது. இரும்பு சாமான்கள், துணிகள், கைவினைப் பொருட்கள், தானிய ஏற்றுமதி மூலம் தங்கம் கிடைத்தது.

உலகிலேயே ஒரே சீராக 80 இலட்சம் ஏக்கர் விளைநிலம் காவிரிப் படுகைப் பகுதியில் தான் அமைந்துள்ளது. அங்கும் மூன்று போகச் சாகுபடிக்குக் காவிரியில் நீர் வந்து கொண்டிருந்தது.

வியாபாரத்திலும், ஏற்றுமதியிலும், விவசாயத்திலும் கிடைத்த பணத்தைத் - தங்கத்தைச் சோழர்கள் படைப் பலத்தைப் பெருக்கிக் கொள்ளப் பயன்படுத்தினர்.

மலேயா காடுகளிலிருந்தும், மைசூர் காடுகளிலிருந்தும் யானைகள் பிடித்து வரப்பட்டன.

பர்மாவிலிருந்து தங்கம் கொடுத்து குதிரைகள் வாங்கப் பட்டன.

ஏன் அதிகமான கோவிலைக் கட்டினார்கள்?

தமிழர்கள் ஏன், கோயில் கோயில் என்று அதைச் சுற்றியே வாழ்ந்துவருகிறோம் ?

கோயில்கள் எப்பொழுதெல்லாம் கட்டப்பட்டன ?

மக்களுக்குப் பிரித்துக் கொடுக்காமல், அரசன், அரசின் நிலங்களை, ஏன் கோயில்களுக்கு மானியமாக எழுதி வைத்தான் ?

உலகின் குருவாகத் தமிழகம் ஆனது எப்படி ?

எந்த ஒரு அரசும் பட்ஜெட் போடும் பொழுது, வரி வசூல் என்ன? அதில் அரசு நடத்த அதிகாரிகளுக்கு ஆகும் செலவு, மக்கள் நலத் திட்டங்களுக்கு ஆகும் செலவு ன்னு வரவு செலவை வைத்துத் தன்னிறைவுத் திட்டத்தை அடையத்தான் நிதிநிலை அறிக்கை போடுவார்கள்.

இதையே தான் தமிழகக் கோயில்கள் செய்தன.

கோயில் இல்லா ஊரில் குடி இருக்க வேண்டாமுன்னு அதைத்தான் சொல்லி வெச்சாங்க.

மன்னன் கோயில் கட்ட ஆரம்பித்தவுடன், கட்டுமானப் பணிக்கு அந்த ஊரைச் சுற்றி உள்ள கட்டுமானக் கலைஞர்கள், சிற்பக் கலைஞர்கள், கல் தச்சர்கள், கட்டுமானப் பொருட்களான செங்கல், சுண்ணாம்பு போன்றவற்றை உற்பத்தி செய்வோர், அதை ஓரிடத்தில் இருந்து கோயில் கட்டும் இடத்திற்குக் கொண்டு செல்லும் போக்குவரத்து, வர்ணம் அடிக்க, ஓவியக் கலைஞர்கள், இப்படி அனைவருக்கும் வேலைவாய்ப்பு, அதுவும் அரசரால் கொடுக்கப்படும் அரசு வேலை.

கோவிலுக்கு மானியமாகக் கொடுக்கப்படும் நிலங்கள், குத்தகை மூலமாக விவசாயிகளுக்கு விடப்பட்டு அதன் மூலம் விவசாய உற்பத்தி, அதற்கு ஒரு சமூகம், பண்ட மாற்று முறையில், தன்னிறைவு பெற்ற பொருளாதாரம்.

*கோவிலுக்குக் கொடுக்கப்பட்ட பசு மாடுகள், அதைக் கவனித்தல், அதற்கு ஒரு சமூகம், இதனால் கோயிலுக்கும் அந்தக் கிராமத்தாருக்கும் பால் சார்ந்த பொருட்கள்.*

*நைவேத்தியம் சமைக்க சமையல் கலைஞர்கள். அதற்கு ஒரு சமூகம்.*

*சமையல் செய்யப் பாத்திரங்கள் செய்ய மண்பானை செய்வோர் மற்றும் உலோகப் பாத்திரம் செய்வோர், அதற்கு ஒரு சமூகம். அவர்களுக்குத் தொடர்ந்து வேலை.*

*நந்தவனம் மூலம் தெய்வத்திற்குப் பூ மாலை மற்றும் அலங்காரச் சேவை செய்ய நந்தவனம் காப்போருக்கு வேலை. அதற்கு ஒரு சமூகம். அவருக்குத் தொடர்ந்து வேலை இருக்க, அதற்கேற்ப கோவில் உற்சவங்கள்.*

*மங்கள இசை இசைக்கும் கலைஞர்கள் ஓர் சமூகம். கூத்துக் கலைஞர்கள் என அவர்களுக்கும் வருட மானியம் மற்றும் வேலை. மாலை வேளைகளில் ஆன்மீகக் கச்சேரி என்று மனதிற்கு இனிய பொழுது போக்கு நிகழ்ச்சிகள்.*

*தெய்வத்தின் வஸ்திரங்கள் நெய்ய ஒரு சமூகம்.*

*அந்த வஸ்திரங்களைத் துவைக்க ஒரு சமூகம், அவருக்கும் தொடர்ந்து கோவில் மானியம் மூலம் வேலை.*

*கோயிலைச் சுத்தமாக வைத்துக்கொள்வது ஒரு தேவை, அதைச் செய்ய ஒரு சமூகம். அவருக்கும் கோயில் மூலம் மானியம், வருட வருமானம்.*

*இவை அனைத்தையும் நிர்வாகம் செய்ய, கணக்குப் பார்க்க, ஒரு சமூகம்.*

*இவர்கள் அனைவரும் அவரவர் வேலையைப் பார்க்க, அதன் மூலம் வாழ்வாதாரம் பெறவும், கோயில் ஒரு மிகப்பெரிய தொழிற்சாலை. ஆன்மீகம் ஒட்டிய வாழ்வாதாரம்.*

*பெரு வெள்ளம் வந்து ஊரே மூழ்கி போனாலும், கோயிலின் கோபுரத்தில், கலசம் மூலம், செறிந்த விஞ்ஞான அறிவுடன், அதனுள் 12 வருடம் வரை கெடாத அந்த கிராமத்தில் மண்ணுக் கேற்ப விளையும் விளை பொருட்களின் விதைப் பொருட்கள்.*

12 வருடத்திற்கு ஒரு முறை அதை மாற்றி அமைத்து, மராமத்துப் பணிகள் மேற்கொள்ள மேற்சொன்ன அனைவருக்கும் ஒரு கூட்டு வேலை வாய்ப்பு.

இப்படி அவர் அவருக்குத் தெரிந்த பணி, அதைச் சார்ந்த சமூகம், ஒன்றிணைந்து தன்னையும் காப்பாற்றிக்கொண்டு, தன்னிறைவு வாழ்க்கை என வாழ்வதற்குக் கட்டமைக்கப்பட்டதே, நம் கோயில்கள்.

ஊருக்கு ஒரு கோயில், அதைச் சுற்றிலும் அனைத்துச் சமூகமும்,

அந்த, அந்த ஊரைச் சுற்றி உள்ள இயற்கை வளங்கள் பாதுகாக் கப்பட்டு, மூலிகை மூலம் வைத்தியம், அதற்க்கென ஒரு சமூகம் என ஊரைச் சுற்றியே, ஓர் தன்னிறைவு வாழ்க்கை.

இப்படி அமைக்கப்பட்டது தான் நம் பொருளாதாரக் கட்டமைப்பு.

மாதச் சம்பளம் பணமாக, பணத்திற்குப் பொருள், அதன் விலை ஏற்ற இறக்கம், பண வீக்கம், இவை எதுவுமே சாராமல் ஒரு தன்னிறைவு வாழ்க்கை.

தெய்வங்களுக்கு உயிரூட்டி, அந்தத் தெய்வங்கள் அங்கே வாழ்வதாகவும், அந்தக் கோயிலின் சொத்துக்கள், அந்தத் தெய்வங்களின் சொத்துக்கள் என்றும்,

உயிருள்ள ஒருவர், எப்படித் தினமும் குளிப்பாரோ, உடை உடுத்திக் கொள்வாரோ, தினமும் உணவு உண்பாரோ, நம் வாழ்வா தாரத்திற்கு உதவும் ஒருவரை நாம் எப்படிப் போற்றிக் கவனிப் போமோ, அப்படி அவருக்கு நன்றி செலுத்தும் விதமாக, அனைவரின் சார்பாக, பூஜைகளைக் கவனிக்க ஒரு சமூகம்.

இப்படி ஒரு கோயிலை வைத்து, ஆன்மீகம் மூலமாக ஒரு தன்னிறைவுப் பொருளாதாரத்தை உலகிற்கு வாழ்ந்து காட்டிய தாலேயே, தமிழகம் உலகத்திற்குக் குருவாகத் திகழ்ந்தது.

''நார்த்தாமலை சிவன் கோவில்கள் அற்புதங்கள்'' எனும் தலைப்பில் பேராசிரியர் பாரதிசந்திரன் அவர்கள் ஒரு நூலை அல்ல, ஒரு பொக்கிஷத்தை உருவாக்கி இருக்கிறார். நான் இந்த நூலுக்குள்

செல்வதற்கு முன்பு, இந்நூல் ஆசிரியரைப் பற்றிச் சிறிது கூற விரும்புகிறேன் பேராசிரியர் பாரதிசந்திரன் அன்பிலும், பண்பிலும் பண்பட்ட நல்ல மனிதர். அறிவிலும், குணத்திலும், அனை வருக்கும் ஆசான். ஏனெனில், அவரிடம் இருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய நல்ல விஷயங்கள் ஏராளம். ஏராளம். அறிவு நிலையில் அனைவரும்முன்னேற வேண்டும் ஆய்வுகள் வெளிவர வேண்டும் என்று விரும்புபவர். அதற்குத் துணை நிற்பவர். சிந்தனையைத் தூண்டும் சிறுகதைகள் எழுதுவதும், கவின்மிகு கவிதைகள் படைப்பதும், கருத்தைத் தூண்டும் கட்டுரைகள் எழுதுவதிலும் வல்லவர். நூல் விமர்சனம், திரை விமர்சனம் செய்பவர். இனிது எனும் இணைய தளத்தில் சிறப்பான இணைய தளம் பற்றிய கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதி வருகிறார். இப்படிப் பன்முகம் கொண்ட பண்பாளர். எதிர் காலத்தில் பல்துறை அறிஞராக இவர் அடுத்தடுத்த தலைமுறை யினரால் அறியப்படுவார் என்பது நிச்சயம். மேற்கூறியவை, உண்மையை உள்ளபடியே மனமுவந்து கூறும் வார்த்தைகளாகும்

நார்த்தாமலை சிவன் கோயில்கள் பற்றிய செய்திகளை எளிமையாகக் கூறிச் செல்வது போல் இருந்தாலும் ஒவ்வொன்றிலும் ஆழமான செய்திகளை ஆதாரத்தோடு முன்வைக்கிறார் முத்தரையர், சோழர், பாண்டியர்களின் கலைப் பாணியைக் கொண்டு கோவில்களின் அமைப்பு ஆகியவற்றை நாம் முழுவதுமாக அறிந்து கொள்ள முடிகிறது.

இந்நூலில், ஆய்வுப்பகுப்பினை ஆழமாகவும், தெளிவாகவும், மிக நேர்த்தியாகவும், அமைத்துள்ள பாங்கு குறிப்பிடத்தக்கது. அறிஞர்களின் கருத்து, மற்றும் ஆதாரங்களைத் தேவையான இடத்தில் அழகாகப் பயன்படுத்தியது குறிப்பிடத்தக்கதாகும்.

சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் வரலாற்றை நாம் அறிந்திருக்கிறோம். இந்நூலின் மூலம் முத்தரையர்களின் வரலாற்றை அறிந்துகொள்ள முடிகிறது. நார்த்தாமலையில் உள்ள பழியிலி ஈசுவரம் குடைவரைக் கோவிலைச் சாத்தன் பழியிலி உருவாக்கினான். அவன் மகள் பலியிலி சிறியநங்கை இதற்குப் பல தானங்களை அளித்தாள். விடேல்விடுகு முத்தரையன் பெரும்பிடுகு பெருந்தேவி திருமயத்தில் உள்ள விஷ்ணு குடைவரைக்

கோயிலைத் தோற்றுவித்தார் இக்கோயில் பூஜைகளுக்காக ஒரு கிராமத்தையே தானமாக அளித்தார். முத்தரைய மன்னர்களின் ஆட்சியில் பெண்கள் சரிநிகராக அரசவையில் இருந்து ஆட்சி செய்து இருக்கின்றார்கள் என்பது சிறப்பான புதுமையான செய்தியாகும்.

ஆசிரியர் இலக்கிய வரலாற்றுச் சான்றுகளை மட்டும் அல்லாமல் மாநிலக் கையேடு, இந்திய விவரச்சுவடி, கல்வெட்டுச்செய்திகள் செப்பேட்டுச்செய்திகள் தமிழறிஞர்களின் குறிப்புகள், பதிவுகள் ஆகியவற்றைத் தரவுகளாகக் கொண்டு அழகாக இந்த நூலை எழுதியுள்ளார்.

நார்த்தாமலையில் காணப்படும் சிவன் கோவில்கள் ஆறு ஆகும்.

1. **பழியிலி ஈசுவரம்- குடைவரை கோயில்**
2. **ஜ்வரகரேஸ்வரர் கோயில்- சுனைக்கோயில்**
3. **விஜயாலய சோழீஸ்வரம்**
4. **நகரீஸ்வரம்**
5. **திருக்கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயில்**
6. **திருவானைக்கா ஈசுவரம்**

போன்றவை கற்றளிக் கோயில் எனவும், ஒவ்வொரு கோயில் அமைந்திருக்கும் நிலை, கட்டிய அரசர்கள், கோயில் வரலாறு ஆகியவற்றை முழுமையாக ஆய்வு செய்து தந்திருக்கும் பாங்கு பாராட்டத்தக்கது. இம்மலையில் மூலிகைகள் காணப்படுகிறது என்பது சிறப்பான செய்தியாகும்.

கோயில் பற்றிய முழுமையான அறிவு பெற்றிருந்தால் மட்டுமே அதன் அமைப்பைப் பற்றி முழுமையாக விளக்க முடியும். அவ்வகையில் கோயில் இவ்வகையைச் சார்ந்தது, கோபுரம், விமானம், திருச்சுற்று, அதிஷ்டானம், பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி, மண்டபங்கள், கருவறை ஆகிய அமைப்புகள் அழகாக தெளிவாக இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன.

கலைகளாகக் கூறப்படும் சிற்பம், ஓவியங்கள் பற்றிய செய்திகள் தெளிவாக ஆதாரத்துடன் கூறப்பட்டுள்ளன. கருவறை, துவாரபாலகர், சுற்றுப்புறப் பரிவாரத் தெய்வங்கள் பற்றிய முழுமையான விவரங்கள் விளக்கமாகத் தெரிவிக்கப்பட்டுள்ளன. ஓவியங்கள் பற்றிய செய்திகள், விளக்கங்கள், மன்னர்களின் காலம் ஆகியவற்றை விளக்கியுள்ளது சிறப்பாக உள்ளது.

கோயில் என்னும் பொழுது திராவிடம், விசாரம் என இரு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. நார்த்தாமலைக் கோவில் இதிகாச நம்பிக்கைகளின்படி இருவிதக் கதைகளுடன் இந்த ஊர் தொடர்பு படுத்தப்பட்டுள்ளது. நார்த்தாமலை இன்று உள்ளது போல் இல்லாமல், பல்லவர், சோழர் காலத்தில் செல்வம் கொழிக்கும், வாணிபம் பெருகும் பகுதியாக, வணிகர்களின் தலைமையகமாக இருந்திருக்கிறது. குறிப்பாக நானா தேசத்து ஐநூற்றுவர் என்கிற வணிகர் குழுவிற்குத் தலைமைச் செயலகமாக இருந்திருக்கிறது.

நார்த்தாமலை பல்லவர், முத்தரையர், சோழர், பாண்டியர், விஜயநகர பேரரசு, புதுக்கோட்டைத் தொண்டைமான் ஆகியோர் இப்பகுதியை ஆண்டுள்ளனர். ஆகையால் பல மன்னர்களின் கொடைகள் இக்கோவில்களில் அனைத்துப் பகுதிகளிலும் பிரதிபலிக்கக் காணலாம்.

தஞ்சைப் பெரியகோவில் கட்டுமானத்தில் பெரிதும் பயன் படுத்தப்பட்ட சிற்பங்கள் அனைத்தும் இப்பகுதியில் இருந்து வெட்டி எடுக்கப்பட்ட கற்கள் ஆகும் என தமிழ்விக்கிப்பீடியா கூறுகிறது. இவ்வாறு வரலாற்றுச் செய்திகளை மீட்டெடுத்து ஆதாரத்துடன் அழகாகத் தெளிவாக நம்மை அந்த பழைய நாட்களுக்கே அழைத்துச் சென்று, நார்த்தாமலை சிவன் கோயில் களை அழகாகத் தெளிவாக இந்நூலில் வெளிப்படுத்தியுள்ளார் ஆசிரியர். அவருடைய ஆய்வுப் பணியும் தமிழ்ப் பணியும் நெடியதாகி நீடூழி வாழ வேண்டும்.

அவன் அருளாலே அவன் தாள் வணங்கி என்பார் திருநாவுக்கரசு பெருமான். அப்படிப்பட்ட ஈசனின் அருள், சகோதரர் பாரதிசந்திரன் அவர்களுக்குப் பரிபூரணமாகக் கிடைத்துள்ளது. வாழ்த்துக்கள்.

மாதவரம் - வாழ்த்துக்களுடன்,
சென்னை. **முனைவர் மா. அபிராமி**

# வாழ்த்துரை

**மு. அரசகுமாரி**
துணை முதல்வர்,
வேல்டெக் ரங்கா சங்கு கலைக்கல்லூரி,
ஆவடி.

*"**நா**ர்த்தாமலை சிவன் கோயில்களின் அற்புதங்கள்" எனும் இந்நூலை நம் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் பாரதிசந்திரன் (முனைவர் செ.சு.நா. சந்திரசேகரன்) எழுதி இருப்பது மிக்க மகிழ்ச்சியை அளிக்கிறது...*

*நார்த்தாமலை ஒரு வரலாற்றுச் சிறப்புமிக்கத் திருத்தலமாகும். அவ்விடம் முத்தரையர்களும், சோழர்களும், பாண்டியர்களும் மற்றும் குறுநில மன்னர்களும் ஆட்சி செய்த இடமாகும்.*

*இம்மன்னர்களின் வரலாற்றுச் செய்திகள் இப்பகுதியில் நிறைந்து கிடைப்பதற்கு வாய்ப்புகள் அதிகமாக உள்ளன. குறிப்பாகக் கோவில் திருப்பணிகள், கோவில் சார்ந்த இடங்களில் மன்னர்களின் வாழ்க்கை வரலாறுச் செய்திகள் கல்வெட்டுகள் மூலமாகக் கட்டாயமாகக் காணப்படும்.*

*அவ்விதமான மன்னர்களின் அரசாட்சிக் காலங்கள் குறித்தான கல்வெட்டுகள், அவர்களின் திருப்பணிகள் குறித்தான கல் வெட்டுக்கள் இங்கு அதிகம் இருப்பதாக இந்த நூல் வெளிப் படுத்திக் காட்டியிருக்கிறது.*

குறிப்பாகக் அக்கல்வராயன் என்னும் மன்னன் போரில் இறந்தவுடன், அவரது மனைவிமார்கள் தீ ஏற்படுத்தி அதற்குள் மறைந்தார்கள் என்னும் கல்வெட்டுச் செய்திகள் இவ்வூரிலுள்ள கண்மாய் பகுதியில் இருப்பது வரலாறு. அடுத்த தலைமுறைக்குத் தரும் அரும்செயல் இதாகும்.

மேலும், சுரகரேஸ்வரர் எனும் இறைவன் சுனைக்குள் இருக்கிற, ஒரு கோவில் இருக்கிறது எனும் செய்தியைத் தமிழ்க் கல்வெட்டு ஆராய்ச்சியின் மூலமாகத் தெரிந்து அதை வெளிப்படுத்தியுள்ளார்.

அச்சுனைக்கோவில், சமீபத்தில் வெளி உலகத்திற்கு, பக்தர்களின் மூலமாகக் காட்டப்பட்டது. சுனைநீரை இறைத்து அந்த இறைவன் அங்கு இருப்பதைக் காணமுடிந்தது என்பது மகிழ்ச்சியான செய்தியாக இருக்கிறது. இதுபோன்ற பல உண்மை தகவல்கள், இதுபோன்ற நூல்கள் மூலமாகத்தான் அடுத்த தலைமுறைக்குச் செல்லும்..

கோவில்கள், ஒரு சமூகத்தின் பண்பாட்டை, கலாச்சாரத்தை மேம்படுத்துவதாக அமைந்திருக்கின்றன. நார்த்தாமலையில் இருக்கும் சிவன் கோவில்கள் ஒவ்வொன்றும் பல வரலாறுகளைச் சுமந்து நிற்கின்றன.

விஜயாலயன் எனும் சோழ மன்னன் எந்தக் கோவிலைக் கட்டினான் எனும் ஆராய்ச்சியில், அம்மன்னன் ஒரு கோவிலும் இவ்விடத்தில் கட்டாது ஆனால் அவன் பெயரால் ஒரு மிகப்பெரும் கலைப்பொக்கிஷம் வழங்கப்படுகிறது என்பது கேள்விக்குறியான ஒன்று என்றாலும், அதற்கு விடை தருகிற செய்திகளும் இந்நூலில் காணப்படுகிறன.

இயற்கையோடு ஒட்டி உறவாட நம் தமிழ் மக்கள் இயற்கையோடு நாம் வணங்குகிற இறைவனையும் வைத்து அங்கு கோயில் கட்டினார்கள். அது நம் உடலுக்கும் மனதிற்கும் மகிழ்ச்சி அளித்தது. கடவுளரின் அருளாசியும் கிடைத்தது. இவ்வகையில், சமணர்களின் வாழ்விடம்,, சமணக் குடைவரைக் கோவில்கள், பதினெண் விண்ணகரம் என்னும் வைணவ திருவுருவங்கள் இருக்கும் குடைவரைகள் என மிக முக்கியமான வரலாற்றின் அற்புதங்களை இவ்விடத்தில் காணலாம் என்பதை இந்நூல் விரித்துக் கூறுகிறது.

திருக்கடம்பூர் நாயனார் திருக்கோயில் பல அற்புதங்களை மறைத்து வைத்திருக்கிற கோவிலாக இருக்கிறது. அங்கிருந்து சித்தன்னவாசல் வரைக்கும் ஒரு குடைவரைப் பாதை இருப்பதாகச் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன.

நார்த்தாமலையில் மிகப் பெரும் புதையல் இருப்பதாகச் செவிவழிப் பாடலும் அங்கு வழங்கப்படுகிறது. இக்கோயிலில் ஆதிகாலத்தில் படைவீரர்கள் தங்கும் அளவிற்கு மிகப் பிரமாண்டமான திருசுற்றுச் சுவர்களை உடையதாக இருக்கிறது என்கிற வரலாற்றுச் செய்தியை நாம் அறிந்து மகிழ்கிறோம்.

பேராசிரியர் பாரதிசந்திரன் இந்த நூலாக்கத்திற்காகக் கடுமையான உழைப்பைத் தந்திருக்கிறார். கோவில்கள் சார்பான, கோவில் கலை சார்பான, கல்வெட்டுகள் சார்பான, வரலாறுகள் சார்பான தேடல்களைத் தேடி அறிந்து அவற்றைத் தொகுத்து விளக்கி, இந்த நூலை அவர் தந்திருக்கிறார். இது, கடுமையான உழைப்பின் வெளிப்பாடாகும்.

கோவில்களை ஆராய்ச்சி செய்வது ஒரு எளிமையான பணி அல்ல. தவறான முன்னுதாரணங்கள் அங்கு வந்து விடக்கூடாது. அது வரலாறை அழிக்கும் செயலாகி விடும். எனவே, இந்த நூல் அவற்றைச் செய்யாமல் நுணுகி ஆராய்ந்து அதற்கான ஆதாரங்களுடன் கூறி விளக்குகிறார் ஆசிரியர்.

சரளமாகப் படிப்பதற்கும், சலிப்பு ஏற்படாது படிப்பதற்கும் நூலை அதற்கேற்றவகையில் தந்திருப்பது பாராட்டுக்குரியதாகும் இந்நூலில் காணப்படும் புகைப்படங்களும், வரைபடங்களும், விளக்கங்களும் நேரடியாகக் கோவிலுக்குச் சென்று பார்ப்பது போல் இருக்கிறது.

நம் பாரம்பரியம் இன்னும் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் இருக்க வேண்டுமென்றால், இதுபோன்ற கோவில்களைப் பாதுகாக்க வேண்டும். அதை அடுத்த தலைமுறைக் குழந்தைகளுக்கு நாம் சரியாகப் போதிக்க வேண்டும் என்ற அமைப்பில் உருவாக்கப்பட்ட இந்த நூலைத் தமிழ்ச் சமூகம் ஏற்றுக்கொண்டு கட்டாயம் பாராட்டும்.

*பேராசிரியர் பாரதிசந்திரன் தொடர்ந்து எழுதிக்கொண்டிருக்கும் ஒரு பன்முகப் படைப்பாளி ஆவார். வரலாற்றில் மிகமுக்கியமான துறையாக இருக்கிற கோவில்களைக் குறித்து ஆய்வு செய்து வெளியிட்டு இருப்பது அவரது திறமையை வெளிப்படுத்துவதாக இருக்கின்றது.*

*பேராசிரியர் பாரதிசந்திரன் கல்லூரியின் தேர்வு கட்டுப்பாட்டு அதிகாரியாக இருந்து சிறப்புடன் செயல்பட்டு வருகிறார். மாணவர்களுக்கு மிகவும் பிடித்த, சிறந்த பேராசிரியர். இது போன்ற நிறைய நூல்களை அவர் எழுதி வெளியிட வேண்டும் என வாழ்த்தி அவர் செயல்பாடுகளை வரவேற்கின்றேன்.*

- இப்படிக்கு,

*சென்னை* **மு. அரசகுமாரி**

# நன்றியுரை

**த**மிழ்நிலம், பழங்காலம் தொட்டு அறிவுசார் மக்களைக் கொண்ட நாடாக இருக்கிறது. பண்டைய வரலாறும், வாழ்வியல் எச்சங்களும், பழம்பெரும் சாதனை வெளிப்பாடுகளும், பதிவுகளும், சின்னங் களும், இன்ன பிறவும் தமிழர்களின் திறன்மேம்பாட்டை உணர்த்தும் காரணிகளாகி மேற்காணும் கூற்றை மெய்ப்பிக்கின்றன. கோயில்களும், கோயில் சார்ந்தவை களும் ஆன்மிகச் சிந்தனையின் ஒரு பகுதியாகி வழி நடத்தும் வல்லமை உடைய பொருண்மை ஆகின்றன.

கோயில்களுக்குள், அறிவியல் சார்ந்த செயல் பாடுகளை, ஆன்மீகப் போர்வையில் யாவரையும் செயல்பட வைத்த பாங்கு, தமிழர்களின் சமூக ஒழுகலாற்றின் மேம்பாட்டை மையம் வைத்ததாக இருந்தன எனத்தெளியலாம். இதனைக் கோயில்களும் அறிவியலும் எனும் தலைப்பில் பல செய்திகளை நூல்கள் வழியும் இணையம் வழியும் அறியமுடிகின்றது.

மனதையும், உடலையும் ஒருங்கே மேம்படுத்தும் இடமாகக் கோயில்களில் வழிபாட்டு முறைகள்

இருப்பது, அனைத்து மதத்திலும் இருந்தாலும், இந்து மத வழிபாட்டு முறைகள் அவற்றில் தலைசிறந்ததாக இருக்கின்றன. எனவே, கோயில்கள் மானிடசமூகத்தின் ஒட்டுமொத்தத் தெளிவை, உடன்பாட்டை, கருணையை மையம் கொண்டதாக இருப்பதால் சமூகம் அதனைக் காலம்தோறும் சரிவரப் பாதுகாத்து, அப்படியே அடுத்த தலைமுறைக்குத் தரவேண்டும்.

சமூகத்தைக் கட்டமைக்கும் மாபெரும் இடமாகக் கோயில்கள் இருக்கின்றன. எனவே, கோயில்கள், நாட்டின் முன்னேற்றத்தில் மையப்புள்ளியாகத் திகழ்கின்றன.

அழகப்பா பல்கலையில் நான் முதுகலைத்தமிழ் பயின்ற காலத்தில் கோயில்கலை பாடமாக இருந்தது. நான்கு பருவத்தில் மூன்றில் பாடமும், ஒன்றில் கோயில் குறித்த ஆய்வேடும் சமர்ப்பிக்கவேண்டும். உண்மையில் வாழ்க்கைக்குப் பயன்படக்கூடிய பாடங்களில் கோயில்கலை குறித்த பாடமும் ஒன்றாகும்.

ஆதிகாலக் குடைவரைக் கோயில்கள், கற் கோயில்கள், மன்னர்கள் காலக் கோயில்கள், அதன் சிறப்பு, வேறுபாடு, கலைப் பாணி என இக் காலம் வரையிலான வரலாற்றை அங்கு அறிந்துகொள்ள முடிந்தது. இந்துமத வழிபாட்டுக் கூறுகளையும், பிறமத வழிபாட்டுக் கூறுகளையும், படிக்கும் காலத்தில் ஆய்ந்து அறிய அப்பாடங்கள் உதவின.

நார்த்தாமலை சிவன் கோயில்கள் பழமையின் சின்னமாகவும், பல மன்னர்களின் வரலாறுகள் நிறைந்த இடமாகவும் இருந்தன. அதை ஆய்வு செய்ய அப்பொழுது முனைந்தேன். ஆய்விற்காகச் சேகரித்த பல செய்திகள் ஆய்வேட்டில் இடம் பெறாமல் போயின. அவற்றையெல்லாம் இணைத்து முழுமையான செய்திகளுடன் நூலாக்க முயற்சித்தேன். இதைத் தாண்டி இன்னும் ஆய்வு செய்யப்பட வேண்டிய செய்திகள் இக்கோயிலில் நிறைய உண்டு.

அழகப்பா பல்கலையில் தமிழ்த்துறையின் தலைவராக இருந்த பேராசிரியர் அ..விசுவநாதன் நெறியாளராக இருந்து சிறப்பாக வழிநடத்தினார். முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, முனைவர் சு. இராஜாராம் ஆகியோர் ஆய்வினைச் செம்மைப் படுத்தப் பெரும்பங்கு உதவினர்.

முனைவர் தே.சொக்கலிங்கம் அவர்கள் தம் இல்லநூலகத்தில் இருந்து, பெரும்பகுதி ஆய்வுக்கு உதவும் செய்திகளையும், கல்வெட்டுச் செய்திகளையும் தந்து பெரும் உதவிகளைச் செய்தார்கள். அழகப்பா பல்கலைக்கழகம் ஆய்வுச் சிந்தனைகளை எனக்குள் செலுத்திய இன்னொரு கருவறையாகும். இங்கு எனக்குப் பாடம் சொல்லித் தந்த அனைத்துப் பேராசிரியர்களுக்கும் நன்றிகள்.

இந்நூல் செம்மை பெற கருத்துக்கள் கூறி உதவிய மாநிலக் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர் மரியாதைக்குரிய தாமரைக் கண்ணன் அவர்கள் எளிமையோடு அன்பையும் ஆழமான அறிவுத் தேடலையும் மாணவர்களுக்கு மட்டுமல்லாது நண்பர்களுக்கும் வழங்கக்கூடிய பேராசிரியர் ஆவார். அறிவு சார்ந்த நுட்பமான அவர்கள் பேச்சு தமிழ்மொழிக்குக் கிடைத்த வரப்பிரசாதம். அவருக்கு என் மரியாதை கலந்த நன்றிகள்.

பேராசிரியர், முனைவர் சோ.முத்தமிழ்ச்செல்வன் அவர்கள் மத்திய அரசின் விருதாகிய ''இளம் அறிஞர்'' எனும் விருதினைப் பெற்றவர். பல நூல்களை எழுதியும், பதிப்பித்தும், தமிழுக்குத் தொண்டு செய்பவர். அன்பிலும், பாசத்திலும் நிறைந்து நண்பர்களையும், ஆய்வு மாணவர்களையும் வழி நடத்துபவர். அவரின் ஆய்வுச் சிந்தனைகள் பலராலும் பாராட்டப் பெற்றவையாகும். அவர் அணிந்துரை வழங்கி இருப்பது இந்நூலுக்கு மேலும் ஒரு சிறப்பாகும். அவருக்கு எனது அன்பான நன்றிகள்.

பேராசிரியர் மா. அபிராமி அவர்கள், ஆய்வுச் சிந்தனைகளில் மிகச்சிறந்த முன்னோடி. கோயில் கலைகளை மட்டுமல்லாது, பல்துறை அறிஞராகவும் விளங்கக் கூடியவர்கள். நிர்வாகவியல் துறையோடுத் தமிழியலையும் இணைத்து அவர் எழுதிவரும் பல ஆய்வுக்கட்டுரைகள் தமிழுக்குப் பெருமை சேர்ப்பதாகும். அவருக்கும் என் நன்றிகள்.

துணை முதல்வராகிய பேராசிரியர் மு. அரசகுமாரி அவர்கள் மாணவர்களின் வளர்ச்சிக்கும், கல்லூரியின் வளர்ச்சிக்கும் தமது சீரிய நிர்வாகத்தால் மேம்பாட்டை உருவாக்க நினைப்பவர்கள். துறை வேறாயினும், தமிழ் இலக்கியங்கள் மேல் அதீத பற்றுக் கொண்டவர். அவரின் வாழ்த்துரை என் நூலுக்குச் சிறப்பான ஒன்றாகும். எனவே, அவருக்கு மனமார்ந்த நன்றிகள்.

ஆங்கிலத் துறைத் தலைவர் திரு. R. கார்த்திகேயன், கணிதத் துறைத் தலைவர், பேராசிரியர் C. டென்சிலி, வணிகவியல் துறைத் தலைவர், பேராசிரியர் M. உமாதேவி வணிக நிர்வாகவியல் துறைத் தலைவர் முனைவர் G. வீரமணி, கணினியியல் துறைத் தலைவர்கள் பேராசிரியர் N. சாமூண்டீஸ்வரி, பேராசிரியர் V. ஷாலினி ஆகியோருக்கும், கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் முனைவர் E. பாவலன், பேராசிரியர் K. சரவணன், பேராசிரியர் K. சுரேஷ் மற்றும் பிறதுறையைச் சேர்ந்த நம் கல்லூரிப் பேராசிரியர்கள் அனைவருக்கும் மிக்க நன்றிகள்.

நூல் உருவாக்கத்தில் என்னோடு இணைந்து பணியாற்றிய எனது இல்லத்தாள் பா.பாரதி, மகன்கள் கவின், அமுதன் ஆகியோருக்கு என்றென்றும் நன்றிகள். இவர்களின் அன்பான கவனிப்பே என்னை நிறைய எழுதச்சொல்லுகிறது.. தடாகத்தில் அடைத்து விடாமல் பெருக்கடுத்து ஓடும் ஆறாய் எனை மாற்றும் தந்திரசாலிகள் இவர்கள். இவ்வகையில் என் எழுத்துகள் இங்கிருந்தே விசுவரூபம் எடுக்கின்றன.

*நண்பர்கள் தி.சிவபிரகாஷ், சீ.விஜய், முனைவர் சு.முத்துக்குமார் ஆகியோர் தொடர்ந்து அன்பால் எம்மை உருவாக்குகிறவர்கள். அவர்களின் அன்புக்கு என்றும் என் நன்றிகள்*

*இந்நூலைச் சிறப்பாக வெளியிடும் சிவகுரு பதிப்பகத்தார் மற்றும் இந்நூல் வெளிவர உதவிய அனைத்து நெஞ்சங்களுக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.*

*திருநின்றவூர்* **- பாரதிசந்திரன்**
*9283275782* **(முனைவர் செ.சு.நா. சந்திரசேகரன்)**

## உள்ளே...

# நார்த்தமலை வரலாற்றுக் குறிப்புகள்



**முத்தரையர்களும் அவர்தம் ஆட்சியும்:-**

நார்த்தாமலை ஒரு சிறப்பு வாய்ந்த வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஊராகும். இவ்வூரைத் தலைமையிடமாகக் கொண்டு பல மன்னர்கள் ஆட்சி புரிந்திருக்கின்றனர். முத்தரையர்கள், சோழர்கள், பாண்டியர்கள் என மாறி மாறி இவ்வூரை ஆட்சி செய்து வந்துள்ளனர். வரலாற்றின் பக்கங்கள், இவர்களின் வாழ்க்கையை யும், கோயில் பணியையும் நிறைத்து வைத்திருக்கின்றன. ஏழு மலைகளில் ஏராளமான அற்புதமுடைய கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. இம்மலையைச் சுற்றி, மன்னர்களின் வரலாறு, கல்வெட்டுகள் மூலமும் பிறவற்றின் மூலமும் அறிந்து கொள்ள முடிகின்றன. அவ்வாறான வரலாற்றுக் குறிப்புகள் மிக முக்கியமானதாகும்.

கி.பி. 7-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி.9ஆம் நூற்றாண்டு வரை நார்த்தாமலையை முத்தரையர்கள் நேரடியாக நிர்வாகம் செய்து ஆட்சி செய்து வந்தனர். முத்தரையர்களின் பெரும்பகுதியான ஆட்சிக் காலத்தில் அவர்கள் பல்லவர்களுக்கும், பாண்டியர்களுக்கும் அடிமையாய் ஆட்சி செய்தனர். மாறி மாறி இவர்களிடம் நட்பு கொண்டும் பகைமை கொண்டும் ஆட்சி செய்தனர்.

'குவாவஞ் சாத்தன் குவாவனின் மற்றொரு மகனாவான். இவனைப் பற்றிக் குறிப்பிடும் கல்வெட்டு திருச்சிராப்பள்ளி

மாவட்டம் மலையடிப்பட்டியில் கிடைத்திருப்பதால், அப்பகுதியில் இவன் ஆட்சி புரிந்திருக்க வேண்டும். குவாவன் மாறன் செந்தலைப் பகுதியை ஆட்சி செய்து கொண்டிருந்த சமயம் இவன் மலையடிப்பட்டி பகுதியை ஆட்சி செய்து வந்திருக்கிறான் போலும். இவன் வழி வந்தவர்களாகக் கருதப்படும் சாத்தன் பூதி, சாத்தாங்காளி, சாத்தம் பழியிலி என்போர்களுடைய கல்வெட்டு களும் இப்பகுதியிலேயே காணப்படுவதால் இம்மன்னனின் காலம் தொட்டு முத்தரையர் குலம் இரு பிரிவாகப் பிரிந்து இரு வேறு பகுதியை ஆட்சி செய்து வந்திருக்கிறது என்பது புலனாகிறது.

இவன் பல்லவ மன்னன் தந்திவர்மனுக்கு அடங்கிய சிற்றரசனாக இருந்திருக்கின்றான் என்பதும் திருவாலத்தூர் மலையைக் குடைந்து கோயிலாக உருவாக்கி எழுந்தருளிவித்தான் என்பதும் கல்வெட்டினால் அறிய முடிகின்றது.[1]

குவாவன் சாத்தனின் மகன் சாத்தம்பூதியாவான். இவனுக்கு விடேல் விடுகு இளங்கோ அதியரையன் என்ற பட்டப் பெயர் உண்டு.

சாத்தம்பூதியின் உடன் பிறந்தான் சாத்தன்பழியிலி ஆவான். இவனின் மகளின் பெயர் பழியிலி சிறிய நங்கை. அவளின் கணவன் தான் விஜயாலய சோழீச்சுரத்தை மீண்டும் புதுப்பித்த மல்லன் அநந்தன் மீனவன் தமிழதியரையன் ஆவான். சாத்தம் பூதிக்குப் 'பூதி அரிந்திகை எனும் மகள் ஒருத்தியுமுண்டு. இவனின் மகனான பூதி களரி என்பவனுக்குச் சுமரூன்றி முத்தரையன் என்ற பட்டப் பெயர் உண்டு. இவன் 'பூவாலைக்குடி' என்னும் ஊரில் 'புஷ்பவனேஸ்வரர் கோயில்' என்று வழங்கப்படுகின்ற குகைக் கோயிலை அமைத்திருக் கின்றான்.

நார்த்தமலையிலுள்ள 'பழியிலி ஈஸ்வரம்' குடைவரைக் கோயிலைச் 'சாத்தன் பழியிலி' உருவாக்கினான். அவன் மகள் பழியிலி சிறிய நங்கை இதற்குப் பல தானங்களை அளித்தாள் என்றும் அறிய முடிகின்றது. விடேல் விடுகு முத்தரையரின் தாயாரான 'பெரும் பிடுகு பெரும் தேவி' திருமயத்திலுள்ள விஷ்ணு குடைவரைக் கோயிலைத் தோற்றுவித்தாள். இக்கோயில் பூஜைகளுக்காக ஒரு கிராமத்தையே தானமாக இக்கோயிலுக்கு அளித்தாள் என்பதும் முன்னுதாரணமான வரலாறாகும். பெண்கள்

கோயில்களுக்குத் தானம் அளிக்கும் படியான இடத்தில், அரசவையில் முக்கிய இடத்தைப் பெற்றிருந்தாள் என்பதை இதன் மூலம் அறிய முடிகின்றது. முத்தரைய மன்னர்களின் ஆட்சியில் பெண்கள் சரிநிகராக அரசவையிலிருந்து ஆட்சி செய்திருக்கின்றனர் என்பதையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

முத்தரையர் ஆட்சி குறித்து ம.இராஜசேகரதங்கமணி அவர்கள் கூறும் போது, 'தமிழகச் சிற்றரசர்களுள் முதன்மை மிக்கவர் முத்தரையர்'. இவர்கள் ஆண்டு வந்த நிலப்பகுதி 'முத்தரையர் நாடு' என்றே கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. இம்முத்தரையர் நாடு தற்காலத்திய திருச்சி, தஞ்சை, புதுக்கோட்டை மாவட்டங்களின் பெரும் பகுதியினைத் தன்னகத்தே கொண்டு விளங்கியது. இவர்கள் கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி வரையில் வரலாற்று அரங்கினின்றும் மறைந்து விடவில்லை. இவர்கள் பலகாலம் பல்லவர்க்கு உட்பட்ட குறுநில வேந்தராகத் திகழ்ந்தது மட்டுமின்றிச் சிலகாலம் விடுதலை பெற்றுத் தனி வேந்தராகவும் ஆண்டு வந்துள்ளனர். நாடாலும் திறனில் தேர்ச்சி பெற்ற இவர்கள் கட்டடக் கலையின் உயர்ச்சியிலும் தமது முத்தரையைப் பொறித்துள்ளனர்[2] என்பார்.

''முத்தரையர்களின் வழித் தோன்றலான கோவிளங்கோ முத்தரையனைப் பற்றிய சில கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவனுடைய 18-ஆம் ஆண்டுக் கல்வெட்டு நியமத்திலும், 13-ஆம் ஆண்டுக் கல்வெட்டும் 17-ஆம் ஆண்டுக் கல்வெட்டும் திருக்கோடிக்காவலிலும், 13-ஆம் ஆண்டுக் கல்வெட்டும் மற்றொன்று கோவிலடியிலும் காண்ப்படுகின்றன. முத்தரையர் வழித் தோன்றலான இவ்விளங்கோ முத்தரையனே பல்லவர் அழிவுக் காலத்தில் தலையெடுத்துச் சுயஆட்சி நடத்தி வாழ்ந்து வந்தவன் ஆவான். இவனை வென்று பரகேசரிவர்மனான விஜயாலயன் சோழ வமிசத்துக்குப் புத்துயிர் அளித்தான்.''[3]

## முத்தரையர்களின் திருக்கோயில் பணி:-

நார்த்தாமலை மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளில் முத்தரையர்கள் தமது ஆட்சிக் காலத்தில், தமது தனிப்பட்ட கலைப்பாணியில் பல திருக்கோயில்களையும் குடைவரைக்

*கோயில்களையும் கட்டுவித்துள்ளனர். அவற்றில் குறிப்பிடத் தகுந்தன.*

1. நார்த்தாமலை சிவன் கோயில் (விஜயாலய சோழீச்சுவரம்)
2. நர்த்தாமலை பழியிலி ஈச்சுரம் (குடைவரைக் கோயில்)
3. பூவாலைக்குடி புஷ்பவனேசுவரர் கோயில் (குடைவரைக் கோயில்)
4. திருமயம் விஷ்ணு கோயில் (குடைவரைக் கோயில்)
5. மலையடிப்பட்டி பட்டாரர் கோயில் (குடைவரைக் கோயில்)
6. நியமத்துப் பிடாரி கோயில்
7. கோவிந்த புத்தூர் கைலாசத்து ஆழ்வார் கோயில்
8. பூதலூர் குலோத்துங்க சோழ ஈசுவரமுடையார் கோயில்
9. திருப்பழன பெரிய நாயகி அம்மன் கோயில்
10. பள்ளி கொண்ட ராமநாதசாமி கோயில்
11. ஊற்றத்தூர் குலோத்துங்க சோழீஸ்வரமுடையார் கோயில்
12. கீரனூர் உத்தம தானீஸ்வரம் கோயில்
13. கீழத்தானிய உத்தம தானீஸ்வரம் கோயில்
14. புதுக்கோட்டை குன்னாண்டார் கோயில் (குடைவரைக் கோயில்)
15. பனங்குடி அகஸ்தீஸ்வரர் கோயில்
16. விசலூர் மார்க்புரீஸ்வரர் கோயில்
17. காளியாபட்டி சிவன் கோயில்

*போன்று பல திருக்கோயில்களைக் கட்டிவித்துள்ளனர். மேலும் பல திருக்கோயில்களுக்குத் திருப்பணியும் செய்துள்ளனர். சில கோயில்களுக்குத் தானம் அளித்த செய்தியும் கல்வெட்டுக்கள் மூலம் அறிய முடிகின்றன.*

**பரகேசரிவர்மன் விசயாலய சோழன் ஆட்சி:**

*பிறகாலச் சோழர் ஆட்சிக்கு வித்திட்ட மன்னன் விசயாலயச் சோழன் ஆவான். இவனது வரலாற்றைக் (கே.ஏ.நீலகண்ட சாஸ்திரியார்) கூறும் பொழுது , சோழப் பேரரசர்களில் காலத்தால் முற்பட்டவரான விஜயாலனின் மகனே, முதலாம் ஆதித்தன் ஆவான். திருச்சிராப்பள்ளி மாவட்டத்துக் கல்வெட்டு ஒன்றில் பரகேசரி விஜயாலயன் முன்பு அளித்த நில தானத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. சோழ ஆட்சியின் மீட்சி, அவர்களுடைய தொன்மையான தலைநகரமும் காவிரிக் கரையிலமைந்ததுமான உறையூரிலிருந்தே தொடங்கியது. இதையே, திருவாலங்காட்டுச்*

செப்பேடுகள் உறுதிப்படுத்துகின்றன. தனது சட்டப்பூர்வமான மனைவியைப் பற்றுவது போல, விஜயாலயன், தஞ்சாவூரைக் கைப்பற்றி அங்கு நிசம்பசூதனி (கொற்றவை) கோயிலை எடுத்தான் என்று இச்செப்பேடுகள் கூறுகின்றன. காஞ்சிபுரம், சுசீந்திரம் போன்ற இடங்களில் கிடைக்கும் பரகேசரி என்று தொடங்கும் சில கல்வெட்டுக்களை, விஜயாலய சோழனுடைய ஆட்சிக் காலத்தவை என்ற கருத்தை ஹீலஷ் வெளியிட்டார்.

சோழரது ஆட்சியின் மீட்சிக் காலத்தின் தொடக்கத்திலேயே இத்தகைய பரந்த நிலப்பகுதியின் மீது விஜயாலயன் தன் ஆட்சியை ஏற்படுத்தியிருக்க இயலுமா என்று சிலர் சந்தேகித்தாலும், இவன் உண்மையிலேயே பலம் மிக்க மன்னனாக விளங்கினான் என்ப தற்கான ஆதாரங்கள் மேன்மேலும் கிடைத்த வண்ணம் உள்ளன.

தென் ஆற்காடு மாவட்டத்திலுள்ள திருக்கோவிலூர் வட்டம் வீரசோழபுரம் என்னுமிடத்தில் கிடைத்துள்ள இம்மன்னனது மூன்றாம் ஆட்சி ஆண்டின் கல்வெட்டு ஒன்றில் 'தஞ்சை கொண்ட பரகேசரி' என்று இவன் வர்ணிக்கப்பட்டுள்ளான். தஞ்சையைச் சுற்றிக் கிடைத்துள்ள பரகேசரி கல்வெட்டுகள் இவனுடையவையே என்று உறுதியாகக் கூறலாம். வடஆற்காடு மாவட்டம் கீழப் புத்தூரில் கிடைத்துள்ள விக்ரமசோழனின் ஐந்தாம் ஆண்டின் கல்வெட்டு ஒன்று விஜயாலயனின் நான்காம் ஆட்சி ஆண்டின் கல்வெட்டு ஒன்றைப் பற்றிக் குறிப்பிடுகிறது. பல்லவ மன்னனின் அடிமையாக இருந்த போதிலும். விஜயாலயன் தன் கல்வெட்டுக் களில் தனது ஆட்சி ஆண்டுகளையே குறிப்பிட்டிருக்கக் கூடும்.[4] என்பர்.

விஜயாலயன் கட்டிய திருக்கோயில் குறித்து கூறும் போது அறிஞர்கள் யாவரும் தஞ்சையில் தனது வெற்றியைக் குறிக்கும் பொருட்டு நிசம்பசூதனி கோயிலைக் கட்டினான் என்று கூறுவர். வேறு எங்கும் இவன் இத்திருக்கோயிலைக் கட்டினான் என்று யாதொரு கல்வெட்டும் இல்லை என்றே அறிய முடிகிறது. இதனையே, 'தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆளமுற்பட்ட விஜயாலயன்' காலத்தில் பல கோயில்கள் கட்டப்பட்டன வென்பதைக் கல்வெட்டுச் சான்றுகளிலிருந்து அறிகின்றோம். ஆனால், அவனால் கட்டப்பட்ட ஒரே கோயில் தஞ்சாவூரிலுள்ள

உக்கிர மாகாளி கோயில் ஆகும். இக்கோயில் நிசம்பசூதனி கோயில் என இராசேந்திரசோழனுடைய திருவாலங்காட்டுச் செப்பேடுகளில் குறிக்கப்பட்டுள்ளது. இன்று தஞ்சாவூர் குயத் தெருவில் இக்கோயில் காணப்படுகிறது. இதில் காணப்படும் சிலை ஒன்று இரண்டாக உடைந்து காணப்படினும் சோழரின் தொடக்ககாலச் சிற்பப் பாணியை அறிந்து கொள்வதற்கு இது பெரிதும் உதவுகிறது எனக் கோ.தங்க வேலு அவர்கள் கூறுவர். விஜயாலய சோழீச்சுவரம் இவன் பெயரால் அழைக்கப்பட்டதேயன்றி, இவனால் கட்டப்பட்டதல்ல என்பதையும் பல்வேறு அறிஞர்கள் பதிவு செய்துள்ளனர்.

விஜயாலயன் வரலாறு குறித்துத் தமிழ் விக்கிபீடியா கூறும் பொழுது, 'பண்டைத் தமிழகத்தில் மூவேந்தர்களுள் ஒருவராகப் பெரும் புகழுடன் விளங்கிய சோழர்கள் நிலை தாழ்ந்து, சிற்றரசர் களாக நீண்ட காலம் இருந்தனர். இந்த நிலையைப் போக்கி சோழரின் பெருமையை மீண்டும் தமிழகத்தில் நிலை நிறுத்தியவர் கோப்பரகேசரிவர்மன் விசயாலய சோழன் ஆவார். காந்த மனோகரச் சோழனின் மகனான விஜயாலயச் சோழன் கி.பி.850-இல் சிற்றரசராக உறையூரில் பதவி ஏற்றார். இவரே பிறகாலச் சோழப் பேரரசிற்கான வலிமையான அடித்தளத்தை இட்டவர். கி.பி.880-ல் நடந்த திருப்புறம்பியப் போரில் தஞ்சாவூரைத் தாக்கிக் கைப்பற்றினார்'[5] என்கிறது.

**மாறவர்மன் சுந்தரபாண்டியன்:-**

மாறவர்மன் சுந்தர பாண்டியன், பிற்காலப் பாண்டிய மன்னர்களில் மிகச் சிறந்தவனாகக் கருதப்படுகிறான். மூன்றாம் இராசராசனை எதிர்த்துப் போரிட்டு அவனை வென்று சோழப் பேரரசனைச் சிற்றரசராகப் பாண்டி யருக்குக் கீழ் அரசு புரிய வைத்தவன். இவனது ஆட்சிக் காலம் கி.பி.1216 முதல் கி.பி. 1239 வரையாகும். நார்த்தாமலையிலுள்ள 'நகரீஸ்வரம்' எனும் திருக்கோயிலில் இவனது 12-ஆம் ஆட்சிக் காலத்துக் கல்வெட் டொன்று காணக் கிடைக்கின்றது. அக்கல்வெட்டில், அம்மன் ஆலயத்தையும், கொடி மரத்தையும் 'பழுதூர் உடையன் பெரியன்' கட்டியதாகக் கூறுகின்றது. இம்மண்டபத்தில் தான் இராமசபை அக்காலகட்டத்தில் கூடிப் பேசினார்கள் என அறிய முடிகின்றது.

பதினெண் விண்ணகரத்திற்கு அடுத்தாற் போல் அமைந்த இவனது ஆட்சிக் காலக் கல்வெட்டொன்றில் 'இவ்வூரிலுள்ள உடையார் விசயாலய சோளீ சுவரமுடைய நாயனருக்கு. இவ்வூர் நகரத்தார் திருப்படி மாற்றுக்கும், திருவிழா நடப்பிக்கவும் திருநாளில் ஆளுடையாரை எழுந்தருளிவிக்கவும் திரு வீதிக் கூத்து நடத்தி வைக்கவும் செய்த நிபந்தத்தைக் குறிப்பிடுகிறது. பதிமூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த இக்கல்வெட்டு'[6] இவ்வாறு கூறுகிறது.

சமணர் குடகு என்னும் பதினென்பூமி விண்ணகரம் என்று அழைக்கப்படும குடைவரைக் கோயில் முதன் முதலில் சமணக் கோயிலாக இருந்தது. முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் பன்னிரண்டாவது (கி.பி.1278) ஆட்சியாண்டில் இக்கோயிலானது விஷ்ணுவின் கோயிலாக மாற்றப்பட்டு விட்டது. இக்கோயிலுக்கு 'மேல்தலி' என்ற பெயருமுண்டு.

## முதலாம் இராஜராஜன்:-

அருள் மொழிவர்மன் என்கின்ற பேரரசர். இராசகேசரிவர்மன் முதலாம் இராசராசசோழன் ஆவார். சிறப்புப் பொருந்தியப் பிற்காலச் சோழ சாம்ராஜ்ஜியத்தின் மணிமகுடமாய் திகழ்ந்த இம்மன்னனின் ஆட்சிக் காலம் கி.பி.985 முதல் கி.பி. 1014 வரையாகும். இவ்வரசின் விருதுப் பெயர்களுள் ஒன்றான தெலுங்கு குலகாலன் என்னும் பெயரால் நார்த்தாமலை தெலுங்கு குலகாலபுரம் என்று அழைக்கப்பட்டது.

நார்த்தாமலை கடம்பர் கோவிலில் உள்ள மிகவும் ஆரம்பகாலக் கல்வெட்டு இவனது ஆட்சிக்காலத்தில் உண்டாக்கப் பெற்றதாகும். இக்கோவில் கல்வெட்டுக்களில் பதினொன்று சோழருடையதாகும். பத்துக் கல்வெட்டுகள் பாண்டியருடைய தாகும். நகரத்தார்கள் செய்த பணி குறித்தும் கல்வெட்டுக்கள் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## முதல் குலோத்துங்க சோழன்:-

கடம்பர் மலைக் கோவில் கல்வெட்டில் முதலாம் இராஜ ராஜனுடைய கல்வெட்டு உள்ளது. ஆதலால் மூலக்கோயில் பத்தாம்

நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்தது என்றும், இன்று காணப் படும் கோயில் பகுதிகள், பழைய கோயிலின் அமைப்பில் முதல் குலோத்துங்க சோழன் காலத்தில் புதுப்பிக்கப் பெற்றவையாக இருக்கலாம்.[7] என்பர். சாளுக்கிய சோழன் என்றழைக்கப்பட்ட இம்மன்னனின் ஆட்சிக் காலம் கி.பி.1070-ஆம் ஆண்டிலிருந்து 1120-ஆம் ஆண்டு வரையாகும் ஐம்பது ஆண்டு காலம் சோழநாட்டை இவன் செம்மையாக அரசாண்டான்.

**மூன்றாம் குலோத்துங்கன்:-**

திருக்கடம்பூர் உடைய நாயனார் கோயில் கடம்பர் மலையில் உள்ளது. இக்கோயிலில் தட்சிணாமூர்த்தி சிலையை நிருவியது இம்மன்னனது காலத்தில் தான் என இம்மன்னனது கல்வெட்டு கூறுகிறது. கோயில்களின் திருப்பணிகள் பலசெய்தவனாகவும் இவன் திகழ்கின்றான்.

இரண்டாம் இராசாதி ராசனுக்குப் பின்பு மூன்றாம் குலோத் துங்கன் ஆட்சிக்கு வந்தான். இவனது ஆட்சிக்காலம் கி.பி. 1178-1218 ஆகும் இவ்வூரிலுள்ள திருவானைக்கா ஈஸ்வரம் கோயிலும் இம்மன்னன் காலத்தே கடம்பன் செங்குடையன் கங்காதரன் என்பவனால் கட்டப்பட்டதாகும்.

**இராமச்சந்திரத் தொண்டைமான்:-**

இராஜா ஸ்ரீபிரகதம்பாதாஸ் இராசா ராமச்சந்திர தொண்டை மான் பகதூர் என்பவர் புதுக்கோட்டை சமஸ்தானத்தின் அரசராக கி.பி.1839 முதல் 1886 ஆம் ஆண்டு வரை இருந்தார். விசயாலயச் சோழீச்சுவரம் கோயிலருகே தலவரசிங்கம் சுனைக் கோயில் உள்ளது. அதன் மேல் பாறையில் கி.பி. 1857-ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இராமச்சந்திரத் தொண்டைமான், ஜ்வரகரஷ்வரர் கோயில் சுனைநீரை வடித்துப் பின் தன் இளைய ராணியுடனும், குருவாகிய சிவராம சுவாமியுடனும் கோயிலுக்கு வந்து இலிங்கத்தை வழிபட்டான் என்று கூறப் பெற்றுள்ளது.

இவருக்குப் பின்வந்த கூத்தப்பால் கண்ணாயிரத் தொண்டை மான் ஜ்வரகரேஸ்வரரை வழிபட்டதாகவும் ஒரு செய்தியுள்ளது.

நார்த்தாமலை சிவன் கோயில்கள் ஒவ்வொன்றும் மன்னர் களின் வரலாற்றைக் கூறும் வரலாற்றுச் சின்னங்களாகக் காட்சி அளிக்கின்றன. ஒவ்வொரு வெற்றியையும் கொண்டாட மன்னர்கள் கோயில்களைக் கட்டியும், திருப்பணிகளைச் செய்தும் பதிவு செய்து வைத்துள்ளனர். கலைநயமிக்க இத்திருக்கோயில்கள் அவர்களது கலைப்பாணியை வெளிப்படுத்தி நிற்கின்றன.

சோழர்கள், பாண்டியர்கள், முத்தரையர்கள், தொண்டை மான்கள், எனப் பல மன்னர்கள் அரசாண்ட இப்பகுதி அவர்ளின் வரலாற்றைக் கலைநயத்துடன் அக்கால மக்களுக்குக் காட்டி நிற்கின்றன.

தொல்பொருள் ஆய்வுத் துறையின் கீழ் சில கோயில்களும், இந்து சமய அறநிலையத்துறையின் கீழ் சில கோயில்களும் உள்ளன. இவற்றை இன்றும் அழகுறச் செப்பனிட்டுத் தமிழகச் சுற்றுலாத் தலமாக மாற்ற முயற்சிக்கலாம். அவ்வாறு செய்தால் வரலாறுகள் இளைய தலைமுறைக்குச் செல்லும்.

சோழர்களும், பாண்டியர்களும். பல்லவர்களும் எட்டாம் நூற்றாண்டு முதல் பதிமூன்றாம் நூற்றாண்டு வரை ஆட்சி செய்தனர்.

பதினான்காம் நூற்றாண்டில், ஐம்பதாண்டு காலம் தென்னாடு முகமதியர்களுக்கு அடிமைப்பட்டிருந்த போது, நார்த்தாமலை, மதுரை சுல்தானின் ஆட்சிக்கு உட்பட்டிருக்கக் கூடும். பின்பு விஜயநகர மரபினர் முகமதியரை வென்று தென்னாட்டை ஆண் டனர். இரண்டாம் தேவராயனின் ஆட்சிக் காலத்தில், கி.பி.1431 ஆம் ஆண்டினதான ஒரே விஜயநகர மரபினரின் கல்வெட்டு இங்குள்ளது. இக்கல்வெட்டு மகாமண்டலேசுவரன் வீரகுமார திருமல்லிநாத உடையாரின் மகன் அம்பேயராய உடையார் என்னும் உள்ளூர் தலைவனைக் குறிப்பிடுகிறது. இக்காலத்ததையடுத்து, நார்த்தாமலை, மதுரை நாயக்கரின் நேரடி ஆட்சிக்கு உட்பட்டது.[8] நார்த்தாமலையை அக்கல்ராஜன் எனும் விஜயநகரத் தலைவன் சிலகாலம் ஆட்சி செய்தான்.

அதன் பிறகு, புதுக்கோட்டைத் தொண்டைமான் அரசர்கள், நார்த்தாமலையைப் பல்லவராயர்களிடமிருந்து கைப்பற்றி அதனை இயற்கை அரண்களுடன் கூடிய இராணுவ நிலையமாகப் பயன் படுத்தியுள்ளனர். மன்னர் ஸ்ரீ பிரகதாம்பதாஸ் ராஜகோபாலத்

*தொண்டைமான் 1948 மார்சு 3-ஆம் நாள் புதுக்கோட்டை சமஸ்தானத்தை இந்தியாவுடன் இணைக்கும் வரை நார்த்தாமலை புதுக்கோட்டை தொண்டைமான் சமஸதானத்தின் ஒரு பகுதியாக இருந்தது.*[9]

**நார்த்தாமலையிலுள்ள மலைகள் குறித்த சிறப்பு:**

*இந்திய விவரச் சுவடி எனும் நூலில், நார்த்தாமலை மலையிலுள்ள கற்களின் தன்மை குறித்துக் கூறப்பட்டுள்ளன. அதாவது, 'நார்த்தாமலை இளஞ்சிவப்புக் கருங்கல் பாறையைக் கொண்ட சிறிய மலையாகும். நார்த்தாமலை சரகம் சாய்வேட்டுடன் கூடிய இளஞ் சிவப்புக் கருங்கல்லின் பருத்தித் தகட்டமைப்பில் உள்ளது. இது கரிய தவிட்டு நிறத்தில் அல்லது கரிய நிறத்தில் பச்சை நிறத்தில் உள்ள கனிப்பொருள் ஆதலால், இது நார்த்தாமலைப்பாறை மீது படிந்திருப்பதால் இப்பாறையின் அடிப்படை இளஞ்சிவப்பு நிறத்தைப் புரூஸ்பூட் விவரித்துள்ளவாறு வெளுத்த அழுக்கு இறைச்சி நிறத்திற்கு மாற்றியுள்ளது. வானிலை மாறுதல்களுக்கு உட்படுத்தப்பட்ட பாறையின் வெளிப்புறத்தில் கோடுகளை அனுசரித்து நார்த்தாமலை பாறைகளில் பிளவுகள் ஏற்பட்டன'*[10] *என்று பதிவு செய்யப் பெற்றுள்ளன. இம்மலையிலிருந்து எடுக்கப் பெற்ற கற்களின் மூலமாகவே பெரும்பகுதி சிலைகளும், கோவில் கட்டுமானங்களும் தஞ்சை பெரிய கோயிலில் பயன்படுத்தப் பெற்றன என்பர்.*

**அடிக்குறிப்பு**

1. நடனகாசிநாதன், 'முத்தரையர் - ப-48
2. ம.இராசசேகர தங்கமணி, 'முத்தரையர் கோயிற் பணிகள்'.
3. சோழர் கலைப்பாணி, பாலசுப்பிரமணியன், ப-40
4. 'சோழர்கள், நீலகண்ட சாஸ்திரி, ப-148
5. www.ta.wikipedia.org,விஜயாலய சோழன்.
6. சோழர் கலைப்பாணி, பாலசுப்பிரமணியன், ப-43
7. இந்திய விவரச் சுவடி, 'புதுக்கோட்டை மாவட்டம் ப-1045
8. இந்திய விவரச்சுவடி, 'புதுக்கோட்டை மாவட்டம் ப-1037
9. http://pudukkottai.grassfield.org/node.13
10. இந்திய விவரச்சுவடி, 'புதுக்கோட்டை மாவட்டம் ப-20



# நார்த்தமலை சிவன் கோயில்களின் தோற்றமும் – வளர்ச்சியும்



**ச**ங்ககாலத் தொடக்கத்திலிருந்த கோயில்கள் பலவும் மரத்தினால் அமைக்கப்பட்டிருந்தன. பின்னர் அக்கோயில்கள் மரக் கோட்டங்களாகவும், களிமண் கோட்டங்களாகவும், சுடுமண் கோட்டங்களாகவும் கட்டப்பட்டன. இத்தகைய கோயில்கள் பற்றிச் சங்க இலக்கியம் விரித்துக் கூறும். சிற்ப நூல் முறைக்கு ஏற்பக் கட்டப்பட்ட கோட்டங்களில் காணப்படும் தெய்வத்தை, நெடுநல்வாடை,

''நூலறிபுலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்''[1]

என்று கூறும்.

பெரும்பாணாற்றுப்படையில், காஞ்சியிலுள்ள திருவெஃகா வில் பள்ளி கொண்டுள்ள திருமாலையும், பிரம்மனையும் பற்றிய செய்தி காணப்படுகின்றது.[2] கி.பி.4ஆம் நூற்றாண்டில் இருந்த கோச்செங்கண்ணான் என்னும் சோழ அரசன் சிவனுக்கு எழுபது கோயில்கள் கட்டி வைத் திருக்கின்றான்.[3] எனும் செய்தியை அறிகிறோம். தென்னிந்தியக் கோயிலமைப்பில் கட்டட, சிற்பக் கலைகள் சோழர்கள் ஆட்சியில் தொடர்ந்து மேம்பாடடைந்தன.

தமிழகத்தில், பிற்காலச் சோழர்களின் ஆட்சிக்கு அடிகோலி யவன் விசயாலயன். இவனது பெயரால் அழைக்கப்படும்

விசயாலய சோழீச்சுரம், முத்தரைய மன்னன் சாத்தம்பழிலியால் குடையப்பட்ட பழியிலி ஈசுவரம் மற்றும் ஜ்வரகரேஸ்வரர் சுனைக் கோயில் என்ற தலைவர சிங்கம், திருக்கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயில், நகரீசுவரம், திருவானைக்கா ஈசுவரம் என்ற ஆறு சிவன் கோயில்களின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் பற்றி அறிந்து கொண்டால், நார்த்தாமலையின் கலைச் சிறப்பும், வரலாற்றுச் சிறப்பும் வெளிப்படும்.

**ஊர் அமைவிடம் :**

வரலாற்றுச் சிறப்புமிக்க 'நார்த்தா மலை' எனும் சிற்றூர் புதுக்கோட்டையிலிருந்து திருச்சிராப்பள்ளி செல்லும் நெடுஞ் சாலையில், புதுக்கோட்டையிலிருந்து 18 கி.மீ. தொலைவில் உள்ளது.

தொடர்ச்சியாகக் காணப்படும் சிறு சிறு குன்றுகளுக்கு நடுவில் உள்ள இவ்வூர் புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ளது. மேல்மலை, கோட்டை மலை, கடம்பர் மலை, பறையன் மலை, உவச்ச மலை, ஆளுருட்டி மலை, மான் மலை, பொன் மலை என்ற எட்டுக் குன்றுகளைக் கொண்டது நார்த்தா மலை. இக்குன்றுகளில் மேல மலையிலும், கடம்பர் மலையிலும், ஊரின் மையப் பகுதியிலும் இந்த ஆறு சிவன் கோயில்களும் அமைந்துள்ளன.

**ஊர்ப் பெயர்க் காரணம் :**

இராசராசன் கல்வெட்டுக்களிலும், இராஜேந்திரனின் மூன்றாம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டிலும் நார்த்தாமலை ''கேரளாந்தக வளநாடான கோனாட்டு அண்ணல் வாயில் கூற்றத்துத் தெலுங்கு குலகாலபுரம்'' எனக் குறிப்பிடப்படுகின்றது. இராஜேந்திரனின் ஐந்தாம் ஆட்சியாண்டு தொட்டு, நார்த்தாமலை இரட்டபாடி கொண்ட சோழவள நாட்டில் அமைந்துள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. மூன்றாம் குலோத்துங்கன், முதலாம் சுந்தர பாண்டியன், குலசேகர பாண்டியன் ஆகியோர் கல்வெட்டுக்களில், ''குலோத்துங்க சோழ பட்டினம்'' என்று குறிப்பிடப்படுகின்றது. குலசேகர பாண்டி யனின் கல்வெட்டில் நார்த்தாமலை ''கடலடையா திலங்கை கொண்ட சோழவள நாடு'' என்று பெயர் மாற்றம் செய்யப் பட்டுள்ளது. [4]

*நார்த்தாமலை என்பதற்கு இருவேறு பெயர்க் காரணங்கள் கூறப்படுகின்றன.*

**காரணம் - 1 :**

*''நாரதர் மலை'' - என்பதே நார்த்தாமலை ஆனது.*

*(1) பெருங்களூர் தலபுராணம் என்ற நூல் இம்மலையை ''நாரதர் மலை'' என விவரிக்கின்றது.* [5]

*(2) புதுக்கோட்டைக் கல்லூரிப் பேராசிரியர் திரு. க.மு. சுந்தரகணேசன் அவர்கள் மாரியம்மன் மீது பிள்ளைத் தமிழ் நூலொன்றைப் பாடினார். அந்நூலில் இவ்வூரை நாரதர் மலை என்றே குறிப்பார்.* [6]

**காரணம் - 2 :**

*நகரத்தார் மலை என்பதே நார்த்தா மலை ஆனது.*

*(1) புதுக்கோட்டை மாநிலக் கையேடு (1944) நகரத்தார் மலை என்றும் பெயரே நாளடைவில் நார்த்தாமலை ஆயிற்று என்று கூறுகின்றது. இப்போதுள்ள நகரத்தார் அனைவரும் பழங்கால நகரத்தாரின் வழிமரபினராவர். ஆதலால் 'நகரத்தார் மலை' அல்லது 'நகரத்துமலை' என்றும் சொல்லின் திரிந்த வடிவமே நார்த்தா மலை ஆயிற்று.* [7]

*(2) ''நகரத்தார் மலை என்ற பழைய பெயரில் மருவே இப்பெயராக இருக்கலாம்''*[8] *என்பார் திரு. தெ.வெ. மகாலிங்கம் அவர்கள்.*

*(3) எஸ்.ஆர். பாலசுப்பிரமணியன் அவர்களும், 'நார்த்தா மலை' நகரத்தார் மலையின் திரிபே* [9] *என்பார்.*

**ஊரின் தனிச் சிறப்பு :**

**சஞ்சீவி பருவதத்தின் ஒரு பகுதி :**

*அநுமன், சஞ்சீவி பருவத்தை இலங்கைக்குத் தூக்கிச் சென்ற பொழுது பெயர்ந்து விழுந்த பகுதியே இம்மலைகள்.*

இம்மலையில் உள்ள மூலிகைகள் போரில் இறந்த வீரர்களை உயிர்ப்பித்து எழச் செய்யும் திறன் உடையன எனும் கதையும், நம்பிக்கையும் பெருநோக்கில் இப்பகுதி மக்களால் கூறப்படுகின்றன.

**சமணத் துறவிகளின் உறைவிடம் :**

இம்மலைகள், தொடக்கக் காலத்தில் சமணத் துறவிகளின் உறைவிடமாக இருந்துள்ளன. ஆளுருட்டி மலையில், இயற்கை யான உட்குகையில் சமணப் படுக்கைகள் காணப்படுகின்றன. மேலமலையில் குடையப்பட்ட பதிணெண் விண்ணகரம் முன்பு சமணக் குடகாக இருந்திருக்கின்றது. பொம்ம மலையில், சமண மடமே இருந்திருக்கின்றது. சமணப் பள்ளிகளும் மடங்களும் நிறைந்த நார்த்தா மலை, சமண சமயத்தின் தலைமையிடமாகவே இருந்திருக்கின்றது. [10]

**பல மன்னர்கள் ஆண்ட பகுதி :**

முத்தரையர், சோழர், பாண்டியர், மதுரை சுல்தான்கள், விஜய நகர மரபினர், மதுரை நாயக்கர், பல்லவராயர், தொண்டைமான் என்று பல மன்னர்கள் நார்த்தாமலைப் பகுதியை ஆண்டிருக் கின்றனர். காரணம் இவ்வூர் நாட்டின் முக்கிய எல்லையாகவும், பாதுகாப்பு அரணாகவும் இருப்பதால் பல மன்னர்கள் இவ்விடத்தைப் போரிட்டு வென்று ஆட்சி செய்தனர்.

**உடன்கட்டை ஏறியது :**

‘அக்கல்ராசன்’ - என்னும் விசயநகரத் தலைவன் வைசேக்கிக் கள்வர்களை அடக்கி ஒடுக்கினான். ‘அக்கச்சி’ எனும் பல்லவராய இளவரசி கள்வர்களைக் கொண்டு, அக்கல்ராசனின் தலையை வெட்டச் செய்தாள். அதனால் அக்கல்ராசனின் ஏழு மனைவிமார்களும் இவ்வூரில் உள்ள நொச்சிக் கண்மாய்க்கு அருகில் உடன்கட்டை ஏறி உயிர் துறந்தனர்.[11] இவ்வூரிலேயே இதற்கான கல்வெட்டும் உள்ளது.

நார்த்தா மலை, மருந்துச் செடிகள் கொண்ட மலையாக இருக் கின்றது. சமணத் துறவிகளின் உறைவிடமாகவும் இருந்திருக் கின்றது. முக்கியப் பகுதி இவ்வூர் என்பதால் பல மன்னர்கள்

*ஆண்டிருக்கின்றனர். அக்கல்ராசனின் ஏழு மனைவிமார்கள் உடன்கட்டை ஏறிய பகுதியாகவும் அமைந்து வரலாற்றில் ஒரு சிறப்பிடம் பெறுகின்றது.*

**கோயில்களின் தோற்றம்:**

*நார்த்தாமலையில் காணப்படும் சிவன் கோயில்கள் மொத்தம் ஆறு ஆகும். இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு காலகட்டத்தில் தோற்றம் பெற்றன. 'பழியிலி ஈசுவரம்' குடைவரைக் கோயிலாகவும், 'ஜ்வரகரேஸ்வரர்' கோயில் சுனைக் கோயிலாகவும், மற்ற நான்கு கோயில்களும் கற்றளிக் கோயில்களாகவும் காணப் படுகின்றன. கோயில்கள் பற்றிய விபரம் பின்வருமாறு :*

1. விஜயாலய சோழீச்சுரம்
2. பழியிலி ஈசுவரம்
3. ஜ்வரகரேஸ்வரர் சுனைக் கோயில்
4. நகரீசுவரம்
5. திருக்கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயில்
6. திருவானைக்கா ஈசுவரம்

**விஜயாலய சோழீச்சுரம் :**

*''விஜயாலய சோழீச்சுரம்'' என்ற பெயரானது மாறவர்மன் சுந்தரபாண்டியனின் 12ஆவது ஆட்சியாண்டிற்குரிய, 13-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டில் தெரிகின்றது. கோயிலின் வடபுறத்தில் உள்ள பாறையில், சில நூறடித் தொலைவில் இக்கல்வெட்டுக் காணப்படுகின்றது.*

*விஜயாலய சோழீச்சுவரக் கோயிலின் அர்த்த மண்டபச் சுவரில் காணப்படும் வடக்குப் பக்கமுள்ள துவாரபாலகருக்குக் கீழே உள்ள கல்வெட்டு, இக்கோயிலின் வரலாற்றைக் கூறுகின்றது. அக்கல்வெட்டானது,*

''ஸ்வஸ்தி ஸ்ரீ சாத்தம் பூதியான
இளங்கோவதி யரையர் எடுப்பித்த கற்றளி
மழை இடிந்தழிய மல்லன் விதுமன்
ஆயின தென்னவன் தமிழதியரையர் புதுக்கு''

ARE No. 216 - 1940 - 41

என்று உள்ளது. இதன் மூலம் இக்கோயில், சாத்தம்பூதி என்ற முத்தரைய மன்னரால் கட்டப்பட்டது என்பதும் மழையின் காரணமாக இக்கோயில் இடிந்து போக சாத்தம்பழியிலியின் மருமகன் ''மல்லன் விதுமன் ஆன தென்னவன் தமிழதியரை யனால்'' புதுகப்பிக்கப்பட்டிருக்கின்ற என்பதையும் அறிகின்றோம்.

இக்கல்வெட்டில் வரும் ''சாத்தம்பூதி'' குலாவன் சாத்தனின் மகன். இவனுக்கு விடேல்விடுகு இளங்கோ அதிபரையன் என்ற பட்டப் பெயரும் உண்டு. இவன் பெயர் குறித்துப் பலர் பல விதமாகக் கூறுகின்றனர்.

''ஸ்வஸ்தி ஸ்ரீசெம்பூதியான இளங்கோ
வதியரையர் எடுப்பித்த கற்றளி மழை
இடிந்தழிய மல்லன் விதுமன் ஆயின
தென்னவன் தமிழதியரையன் புதுக்கு''

என்று எஸ்.ஆர். பாலசுப்பிரமணியன் கூறுவர். [12]

முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் (1227) - 11ஆம் ஆட்சி ஆண்டில், புதுக்கோட்டைக் கல்வெட்டுகள் (பி.எஸ்.ஐ.) 282-ல் இவனது பெயர் 'சாத்தம்பூடி' என்ற இளங்கொடி அரையர் எனக் குறிக்கப்பட்டு இருக்கின்றது. [13]

செம்படி என்றவனால் கட்டப்பட்ட இவ்வாலயம் மழை யினாலும், காற்றினாலும் அழிந்துபட தென்னவன் தமிழஅரையன் என்பான் அதைப் புதுப்பித்தான் என்று ஒரு கல்வெட்டுக் கூறுகின்றது என்று ''தென்னாட்டுக் கோயில்கள்'' என்ற நூலில் எம். இராதாகிருஷ்ணபிள்ளை குறிப்பிடுகின்றார். [14]

இந்திய விவரச் சுவடி ''புதுக்கோட்டை மாவட்டம்'' என்னும் நூலில் 1043-ஆம் பக்கம் ''செம்பூதி'' என்பவனால் கட்டப்பட்டது இக்கோயில் என்று கூறியும், அதன் பின்னர், சில வரிகள் கழித்து ''சாத்தன் பூதி'' இளங்கோ ஆதிரையர் என்பவர்தான் இக்கோயிலைக் (கற்றளி) கட்டிய முன்னவர் என்றும், மழையாலும் இடியாலும் தாக்குண்டு இக்கோயில் சிதைவடைந்தபொழுது, மல்லன் விடுமன், மல்லன் ஆனந்தன் என்கிற மீனவன் தமிழ் ஆதியரையனுக்கு நேர் உறவினன் (சகோதரன்) இவனுடைய மனைவியான பழியிலி சிறியா நங்கை குகைக் கோயிலுக்குத் தானம் அளித்திருக்கின்றாள் என்றுள்ளது.

*வடதுவாரபாலகருக்கு அடியில் காணப்படும் கல்வெட்டே, இக்கோயிலின் வரலாற்றைக் கூறுமுகமாக இருப்பதனால், இக்கோயிலைப் பற்றி எழுதும் அனைவரும் முத்தரையர் காலக் கோயில் இதுவெனத் துணிந்து கூறுவர்.*

*விஜயாலய சோழீச்சுரம், ''முத்தரையர் கோயிற் பணிகள்'' என்ற கட்டுரையில் ம. இராசசேகர தங்கமணி அவர்களும் 'முத்தரையர்கள்' என்ற நூலில் நடன காசிநாதன் அவர்களும், மு. நளினி (வாழ்வியற் களஞ்சியம் - 11 பக்கம் 489-490) அவர்களும் கூறுவதைப் போல் 'சாத்தம்பூதி' என்பவன் கோயில் எழுப்பி, அதுபின் அழிய, தென்னவன் தமிழதியரைன் புதுப்பித்திருக்கின்றான் என அறியலாம்.*

*மலையின் கீழ் இருந்து இப்பொழுது அழிந்த அல்லது மாறு பட்டுப் போன ஒரு கோயிலின் பெயர் விசயாலயன் ஆட்சியாண்டில் விசயாலய சோழீசுரமாக இருந்திருக்க வேண்டும். அது பின் இக் கோயிலுக்கும் வழங்கப்பட்டு நடைமுறைக்கு வந்திருக்கிறது.*[15]

**பழியிலி ஈசுவரம் :**

*மேல் மலையில் விசயாலய சோழீச்சுரத்திற்கு எதிராக இரண்டு குடைவரைக் கோயில்கள் காணப்படுகின்றன. பழியிலி ஈசுவரம் பாறையில் குடையப்பட்டது. இது பல்லவ நிருபதுங்கனது ஆட்சியின் ஏழாவது ஆண்டில் விடேல்விடுகு முத்தரையன் மகன் சாத்தம்பழியிலியால் குடையப்பட்டது.*

*இந்தக் குடைவரைக் கோயிலுக்கு, முன் மண்டபமும், நந்தியும், பலி பீடமும், ''மீனவன் தமிழதியரைன் வாலன் அனந்தன்'' என்பவன் செய்வித்தான் எனக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது.*[16] *மேலும், இவன் மனைவி ''பழியிலி சிறிய தங்கை'' என்பவள் இக்கோயில் பட்டுடையாருக்குக் கொடை அளித்திருக் கின்றாள். ''மீனவன் தமிழதியரையன் வாலன் அனந்தன்'' என்பவன் 'சாத்தன் பழியிலி'க்கு என்ன உறவுமுறை வேண்டும் என்பதில் வேறுபட்ட கருத்துக்களுண்டு.*

*''சாத்தன் பலியிலி என்னும் முத்தரைய மன்னனால் முதலாவது குடைவரைக் கோயில் அமைக்கப்பட்டதென்றும், அவனுடைய மகள் பலியிலி சிறிய நங்கை என்பவள் கோயிலுக்காக நிலம்*

மானியமாக அளித்தாள்'' [17]. சாத்தம்பழியிலியின் மகள் பழியிலி சிறிய நங்கை என்றதனால், மீனவன் தமிழ்தியரையன், சாத்தம் பழியிலிக்கு மருகமன் ஆவார் என்பது டாக்டர் தே.வெ. மகாலிங்கம் அவர்களின் கருத்தாகும்.

ம. இராசசேகர தங்கமணி அர்களும் முத்தரையர் கோயிற் பணிகள் என்ற கட்டுரையில் மேற்கண்ட கருத்தையே தெரிவிக் கின்றார். [18]

என்.ஆர். பாலசுப்பிரமணியன் அவர்களும் சாத்தம் பழியிலி யின் மருமகன் என்றே மீனவன் தமிழ்தியரையரைக் குறிப்பிடு கின்றார். [19]

நடன காசி நாதன் அவர்களும் ''சாத்தம்பழியிலியின் மருமகனின் பெயர் மல்லன் அநந்தன் மீனவன் தமிழ்தியரையன் என்றே 'முத்தரையர்' என்ற நூலில் குறிப்பிடுகின்றார்.

Michad M. Meister அவர்களும், சாத்தம் பழியிலியின் மருமகன் என்றே கூறுகின்றார். [20]

சாத்தானின் (சாத்தன் பழியிலி) மகன் முன் மண்டபம் கட்டி அதில் நந்தியை அமைத்தான். சாத்தானின் (சாத்தன் பழியிலி) மகன் பழியிலி சிறிய நங்கை அக்கோயிலுக்கு நிலக் கொடையளித்தாள் என்று கூறுகின்றது இந்திய விவரச் சுவடி. [21]

மு. நளினி அவர்கள், சாத்தன் பழியிலியின் மகன் மீனவன் தமிழதியரையன் என்றும், மருமகன் பழியிலி சிறிய நங்கை என்றும் கூறுவார். [22]

பழியிலி ஈசுவரத்தை, சாத்தன் பழியிலி அமைத்தான் என்றும், அவனது மருமகன் மல்லன் அநந்தன் மீனவன் தமிழ்தியரையன் முன்னுள்ள மண்டபமும் நந்தியும், பலி பீடமும் அமைத்தான் என்றும், இவது மனைவி நிலம் கொடையளித்தாள் என்றும் அறிகின்றோம்.

**ஜ்வரகரேசுவரர் :**

விசயாலய சோழீச்சுரத்தின் தெற்குப் புறமாய், சிறிய தூரத்தில் அமைந்துள்ள, இச்சுனைக் கோயில் நீருக்குள் அமைந்து

*காணப்படுகின்றது. இக்கோயில் யாரால் எப்போது அமைக்கப் பட்டதெனத் தெரியவில்லை.*

*கி.பி. 1857-ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இராமச்சந்திரத் தொண்டைமான் இச்சுனை நீரை வடித்த பின் தன் இளைய ராணியுடனும், குருவாகிய சிவராம சுவாமியுடனும் கோயிலுக்கு வந்து ஜ்வரகரேசுவரரை வழிபட்டால் என்று கல்வெட்டு ஒன்று கூறுகின்றது.* [23]

**நகரீசுவரம் :**

*திருக்கடம்ப உடைய நாயனார் திருக்கோயிலுக்குப் பக்கமாக உள்ள 'நகரீசுவரம்' என்ற திருக்கோயில் மாறவர்மன் சுந்தர பாண்டியன் 12-ஆவது ஆட்சியாண்டில், கி.பி. 1228 அளவில் கட்டப்பட்டது. இதற்கு எதிராக உள்ள நந்திமேடை இப்பொழுது தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் சீரமைக்கப்பட்டதாகும். இக்கோயிலின் அதிட்டானப் பகுதி முழுவதிலும் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன.*

**திருக்கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயில் :**

*முதல் இராசராசன், முதல் குலோத்துங்கசோழன் என்ற இவ்விரு மன்னர்களின் கல்வெட்டுக்கள் இக்கோயிலுக்குள் காணப் படுகின்றன. இவர்கள் இக்கோயிலுக்குச் செய்த திருப்பணி களையும் இவைகள் கூறுகின்றன.*

*கருவறையும் அர்த்த மண்டபமும் கட்டப்பட்டு, பின்னர் முக மண்டபமும், திருச்சுற்றுக்களும் கட்டப்பட்டிருக்கின்றன. அர்த்த மண்டபத்துடன் இணையும் மகாமண்டபச் சுவர் பின்னர் கட்டப்பட்டதற்குச் சான்றாகக் காணப்படுகிறது.*

*திருக்கடம்ப உடைய நாயனார் கோயில், நகரீசுவரம், மங்களநாயகி திருக்கோயில் மூன்றையும் உள்ளடக்கி, ஒரு பெரிய மதிற்சுவர் எழுப்பப்பட்டிருக்கின்றது. இது இப்பொழுது சிதைந்து காணப்படுகின்றது. இவ்விடம் முன்பு படைகள் தங்கியிருக்கும் இடமாக இருந்திருக்கின்றது.*

*இக்கோயிலின் வடக்குப் பிரகாரச் சுவரில் அமைந்த பாறையில் இராசரானுடைய 22-ஆம் ஆண்டுக் கல்வெட்டுக்கள் காணப்படு*

*கின்றன.*[24] *கி.பி. 1216-இல் இங்கே தட்சிணாமூர்த்தி சிலை வைக்கப் பட்டதாக மூன்றாம் குலோத்துங்கன் கல்வெட்டுக் கூறுகின்றது. சுந்தரபாண்டியனது கல்வெட்டு அம்மன் ஆலயத்தையும், கொடி மரத்தையும் பழுதூர் உடையன் பெரியன் கட்டியதாகக் கூறுகிறது. இம்மண்டபத்தில் தான் கிராம சபை கூடிற்று என்பார்கள்.* [25]

**திருவானைக்கா ஈஸ்வரம் :**

*இக்கோயில் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் பரம்புரு டையன் கடம்பன் செங்குடையன் கங்காதரன் என்பவனால் கட்டப்பட்டது.* [26] *கோயில் அமைப்பைப் பார்க்கும்பொழுது மூன்று கட்டத் திருப்பணிகள் நடைபெற்று இருக்கின்றன என்பதை அறியலாம்.*

*முதல் திருப்பணியாக, ஜம்புகேசுவர சன்னதியின் கருவறையும், அர்த்தமண்டபமும் மகாமண்டபமும், தூண்களுடன் கூடிய திறந்த வெளி முன்மண்டபம், அகிலாண்டீஸ்வரி சன்னதியின் கருவறையும், அர்த்தமண்டபமும் கட்டப்பட்டுள்ளன.*

*இரண்டாம் கட்டத் திருப்பணியாக, ஐம்புகேசுவர சன்னிதி முன்மண்டபத்தின் இருபுறமும் அடைக்கப்பட்டும், சுற்றுச்சுவர் மற்றும் மண்டபங்கள் எழுப்பப்பட்டும் இருக்கின்றன. அகிலாண்டீஸ்வரி சன்னிதி முன்மண்டபத்தின் இருபுறமும் அடைக்கப்பட்டும், ஒட்டுக் கொட்டகையால் ஆன முன் மண்டபமும் கட்டப்பட்டிருக்கின்றன.*

*மூன்றாம் கட்டத் திருப்பணியாக 1996-ல் கும்பாபி ஷேகத் திருப்பணி நடைபெற்றது. சிதைந்துபோய்க் காணப்பட்ட விமானம் நன்கு சீரமைக்கப்பட்டு, வண்ணக் கலவையால் அழகூட்டப்பட்டிருக்கின்றது. தெற்கு, வடக்கு திசைகளில், விநாயகருக்கும் முருகனுக்கும், சிறு கோயில் கட்டப்பட்டுள்ளன. கோயிலின் சுற்றுச் சுவரில் உள்ள இருவாயில்களின் மேல் சுதைச் சிற்பங்கள் செய்யப்பட்டிருக்கின்றன.*

**தொகுப்புரை :**

*நார்த்தா மலை சிவன் கோயில்களின் தோற்றமும் வளர்ச்சியும் என்ற இக்கட்டுரையில் ஆறு திருக்கோயில்கள் ஆராயப்பட்டுள்ளன.*

1. 'நார்த்தா மலை' எனும் ஊர்ப்பெயர், நாரதர் மலை, நகரத்தார் மலை என்ற பெயரிலிருந்துதான் மருவியது என்ற இருவேறு கருத்துண்டு. புதுக்கோட்டை மாநிலக் கையேடு, திருவானைக் காக ஈஸ்வரக் கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஒன்றில் நகரத்தார் மலை என்றே கூறப்பட்டுள்ளது. மேலும் நகரத் தார்கள் இங்கு வந்து குடியேறி, வாழ்ந்த செய்திகள் கடம்பர் மலைக் கல்வெட்டக்களாலும் அறிகின்றோம். எனவே 'நகரத்தார் மலை' என்ற பெயரே, நார்த்தாமலையென மருவியது எனலாம்.

2. இவ்வூர், சமணத் துறவிகள் வாழ்ந்த இடமாக இருந்திருக் கின்றது. பல மன்னர்கள் ஆண்ட பகுதியாகவும் இருந்திருக் கின்றது.

3. விஜயாலய சோழீச்சுரம் ''சாத்தம்பூதி'' என்ற முத்தரைய மன்னால் கட்டப்பட்டு, அது பின் அழிய, தென்னவன் தமிழதி யரையனால் புதுப்பிக்கப்பட்டிருக்கின்றது. விசயாலயன் ஆட்சிக் காலத்தில், இவனது பெயரால் இக்கோயில் அழைக்கப்பட்டு வந்திருக்கிறது.

4. பழியிலி ஈசுவரம், விடேல்விடுகு முத்தரையன் மகன் சாத்தன் பழியிலியால் குடையப்பட்டது. சாத்தன் பழியிலியின் மகள் ''பழியிலி சிறிய நங்கை'' இக்கோயில் பட்டுடையாருக்குக் கொடை அளித்து இருக்கின்றாள்.

5. ஜ்வரகரேஸ்வரர் சுனைக் கோயில், யாரால், எப்போது அமைக்கப்பட்டதெனத் தெரியவில்லை.

6. திருக்கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயில் 'முதல் இராசராசன்' என்ற மன்னனாலும், 'முதல் குலோத்துங்க சோழனாலும்' கட்டப்பட்டிருக்கின்றன.

7. நகரீசுவரம், மாறவர்மன் சுந்தர பாண்டியனின் 12ஆவது ஆட்சியாண்டில் கட்டப்பட்டது.

8. திருவானைக்கா ஈஸ்வரம் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில், 'பரம்புருடையன் கடம்பன் செங்குடையன் கங்காதரன்' என்பவனால் கட்டப்பட்டது. இக்கோயில் மூன்று கட்டத்

*திருப்பணிகளைப் பெற்றுள்ளது. இவ்வூரில் பூசை நடத்தப்படும் ஒரே சிவன் கோயில் இக்கோயில் ஒன்றே ஆகும்.*

**அடிக்குறிப்புகள்:**

1. நெடுநல்வாடை, அடி 76 - 77
2. பெரும்பாணாற்றுப்படை, அடி 372-73
3. இரா. நாகசாமி - மா. சந்திரமூர்த்தி, ‘‘தமிழகக்கோயிற் கலைகள்’’ தொல்பொருள் ஆய்வுத் துறை வெளியீடு, 1976, பக். 4.
4. மு. நளினி, ‘‘வாழ்வியற் களஞ்சியம்’’, பக். 489 - 90.
5. கோபாலகிருஷ்ண காந்தி, இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1036.
6. புலவர் க.மு. சுந்தரகணேசன், ‘‘நாரதர் மலை மாரியம்மன் பிள்ளைத் தமிழ்’’.
7. கோபாலகிருஷ்ண காந்தி, இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1036.
8. தெ.வெ. மகாலிங்கம், கலைக் களஞ்சியம் - 10, ப. 341.
9. எஸ்.ஆர் பாலசுப்பிரமணியன், ‘‘சோழர் கலைப்பாணி’’, ப. 42.
10. கோபாலகிருஷ்ண காந்தி, இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1037.
11. மேலது, ப. 1037.
12. என்.ஆர். பாலசுப்பிரமணியன், Early Chola Art- Part - 1, p. 50.
13. பேரா. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, சோழர்கள்-2, ப. 983.
14. எம். இராதாகிருஷ்ண பிள்ளை, தென்னாட்டுக் கோயில்கள், ப. 155.
15. கோபாலகிருஷ்ண காந்தி, இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1044.
16. கல்வெட்டு எண். 19 (பின்னிணைப்பு)
17. டாக்டர் தே.வெ. மகாலிங்கம், கலைக் களஞ்சியம்-10, ப. 341.
18. மு. இராசசேகர தங்கமணி, ‘‘முத்தரையர் கோயிற் பணிகள்’’ (பின்னிணைப்பு)
19. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியன், சோழர் கலைப்பாணி, ப. 43.
20. Encyclopaedia of Indian Temple Architecture, p. 124
21. கோபாலகிருஷ்ண காந்தி, இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1039.
22. மு. நளினி, வாழ்வியற் களஞ்சியம் - 11, பக். 489-90.

23. கோபாலகிருஷ்ண காந்தி, இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1044.
24. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியன், ''சோழர் கலைப்பாணி'', ப. 126.
25. எம். இராதாகிருஷ்ணபிள்ளை, ''தென்னாட்டுக் கோயில்கள்'', பக். 155 - 156.
26. கோபாலகிருஷ்ண காந்தி, இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1039.



## விசயாலய சோழீச்சுரம்




**விசயாலய சோழீச்சுரம்**

1. கருவறை
2. அர்த்தமண்டபம்
3. துவாரபாலகர்கள்
4. நந்தி
5. சுற்றுக் கோயில்கள்
6. இடிந்த கோபுரம்

**அ. திருக்கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயில்**

**ஆ. நகரீசுவரம்**



**திருக்கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயில்**

1. கருவறை
2. அர்த்தமண்டபம்
3. துவாரபாலகர்கள்
4. மூலவர்
5. அம்பாள் சிலை
6. மலையிலேயே செதுக்கப்பட்ட இலிங்கம்
7. மலையிலேயே செதுக்கப்பட்ட சண்டிகேசுவரர்
8. மலையிலேயே செதுக்கப்பட்ட சண்டிகேசுவரர்

9-13. பரிவாரத் தெய்வங்கள்

14. சப்த கன்னிகள்
15. விநாயகர்
16. பரிவாரத் தெய்வம்
17. விநாயகர்
18. தெட்சிணாமூர்த்தி
19. பரிவாரத் தெய்வம்
20. கொடிமரம் இருந்த பீடம்
21. நந்தி
22. பலிபீடம்
23. திருச்சுற்று மாளிகை
24. ஞான தெட்சிணாமூர்த்தி
25. முன் மண்டபம்
26. சுரங்கப் பாதைக்குச் செல்லும் அறை
27. மலை

**ஆ. நகரீசுவரம்**

1. கருவறை
2. அர்த்தமண்டபம்
3. நந்தி

## திருவானைக்கா ஈசுவரம்



**திருவானைக்கா ஈசுவரம்**

1. கருவறை
2. அர்த்தமண்டபம்
3. தெட்சிணாமூர்த்தி
4. அர்த்த நாரீசுவரர்
5. சண்டிகேசுவரர்
6. நந்தி
7. பலிபீடம்
8. மகாமண்டபம்
9. முன் மண்டபம்
10. துவாரபாலகர்கள்
11. விநாயகர்
12. நாகர்
13. முருகன்
14. பைரவர்
15. தண்டாயுதபாணி
16. நவக்கிரகம்
17. மடைப்பள்ளி
18. பண்டகசாலை
19. விநாயகர்
20. முருகன்
21. வாகன அறை
22. இராசகோபுரம்
23. கருப்பர்
24. நந்திமண்டபம்
25. கிணறு
26. அகிலாண்டேஸ்வரி கருவறை
27. அர்த்த மண்டபம்
28. மகா மண்டபம்
29. நந்தி
30. பலி பீடம்
31. முன் மண்டபம்
32. வாயில்கள்

# திருக்கோயில்களின் அமைப்பும் கட்டிடக் கலையும்

பிற்காலச் சோழர்களது கட்டிடக் கலைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக, விசயாலய சோழீச்சுரம் கலையழகுடன் அமைந்திருக்கின்றது. இக்கோயில் கருவறை, அர்த்த மண்டபம், நந்தி மேடை மற்றும் சுற்றுக் கோயில்களுடன் திகழ்கின்றது. கிழக்குப் புறமாக, முன்பு கோபுரம் இருந்து தற்பொழுது சிதைந்து காணப்படுகின்றது.

இக்கோயிலின் முன்பு, பழியிலி ஈசுவரமும், பதிணென் விண்ணகரமும் குடைவரைக் கோயிலாகக் காணப்படுகின்றன. பழியிலி ஈசுவரம், கருவறை, அர்த்தமண்டபத்துடன் உள்ளது. பதிணென் விண்ணகரம், ஒரு விஷ்ணு கோயிலாகும். இது ‘சமணக் குடகு’ என்றும் கூறப்படுகின்றது. ‘தலவர சிங்கம்’ என்ற சுனைக்குள் ஒரு குடைவரைக் கோயிலுமுள்ளது. கடம்பர் மலையில், நகரீசுவரம் என்ற கோயில், கருவறை, அர்த்த மண்டபம், நந்தி மேடைகளுடன் வனப்புடன் அமைந்துள்ளது.

திருக்கடம்பூர் உடைய நாயனார் கோயில் கருவறை, அர்த்த மண்டபம், முக மண்டபம், திருச்சுற்று போன்றவற்றுடன் அமைந்துள்ளது.

நார்த்தா மலை ஊரின் நடுவே ‘‘திருவானைக்கா ஈசுவரம்’’ என்ற கோயில் கருவறை, அர்த்த மண்டபம், நந்தி மேடை மற்றும்

தேவியின் கருவறை, பிற மண்டபங்கள் போன்றவற்றுடன் சிறிய கோபுரமும் அமைந்து காணப்படுகின்றது.

## விசயாலய சோழீச்சுரம்

### கருவறை :

நார்த்தாமலையில் காணப்படும் எட்டுக் குன்றுகளுள் ஒன்றான மேல்மலையில், இக்கோயில் அமைந்துள்ளது. கருவறை, மேற்குப் பார்த்தது. சுற்றுக் கோயில்களின் நடுநாயகமாக இக்கோயில் விளங்குகிறது. அழகான வேலைப்பாடுகளுடையதுமான கருங் கற்களைக் கொண்டு கட்டப்பட்டிருக்கிறது. அதன் பரப்பு 1240 சதுர அடியாகும்.

கருவறை வட்ட வடிவமானது. இது 5 அடி கனமுள்ள சுற்றுச் சுவரைக் கொண்டுள்ளது. உள்ளே அதனின் விட்டம் 8.5 அடி, உயரம் 8 அடி. வட்டச் சுவரை அடுத்து, சுற்றி ஒவ்வொரு பக்கமும் 29 அடி சதுர மதில் உள்ளது. இரண்டு சுவர்களுக்கும் இடையில் குறுகலான சுற்றுப் பாதை உள்ளது. நான்கு மூலையிலும், நான்கு சதுரத் தூண்கள் நிறுவப்பட்டுள்ளன. இந்த அமைப்பு இந்து சாஸ்திர நூல்களில் கூறப்படும் ப்ரணவ அல்லது ஓங்கார அமைப்பை ஒத்ததாகக் காணப்படுகின்றது. [1]

கருவறையில் உருண்டை வடிவிலான அமைப்பில் இலிங்கத் திருமேனி உள்ளது.

### விமானம் :

கோயில், அதிட்டானம் (அடி), சுவர் (உடல்), பிரஸ்தரம் (தோள்), கிரீவம் (கழுத்து), சிகரம் (தலை), ஸ்தூபி (குடம்) ஆகிய பகுதி களைக் கொண்டுள்ளது.

விமானமானது, நான்கு நிலை மாடங்களை உடையது. முதல் மூன்று நிலைகளும், சதுர வடிவமாகவும், நான்காவதாக உள்ள நிலை (கிரீவம்) வட்ட வடிவிலும் உள்ளது. இதே போன்ற அமைப்பைக் காஞ்சி கைலாசநாதர் கோயிலில் உள்ள விமானத்திலும் காணலாம். [2] இக்கோயில் கட்டிடக் கலையினைப் போலவே அன்னூர் கோயிலும் (கோயம்புத்தூர்) தாராபுரம் வட்டம், பிரமியம் என்ற ஊரில் கட்டப்பட்ட வலஞ்சுழிநாதர் கோயிலும் அமைந்துள்ளன. [3]

**அதிட்டானம் :**

*குமுதம், முப்படைக் குமுதம், கண்டம் என்ற அமைப்பிற்குள் கீழ் ஒரு வரி உள்ளது. இதில் சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன. இவை பெண்களின் நடனத்தைக் காட்டும். இதே அமைப்பு கோயம்புத்தூரில் உள்ள அன்னூர்க் கோயிலும் உள்ளது.* [4]

**சுவர் :**

*சுவர்கள் அரைத் தூண்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. அவர்களில் தேவகோட்டங்கள் காணப்படவில்லை. அரைத் தூணின் போதிகைகள் 45 கோள வடிவுடையதாகும். பல்லவர் கோயில் களில் காணப்படுவதைப் போன்ற மாடக் குழிகளோ, தெய்வப் பதுமைகளோ இக்கோயிலின் சுவர்களில் இல்லை.* [5] *இங்குள்ள தூண்களானவை மேலும், கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டையாகவும் பகுக்கப்பட்டுள்ளன. அவற்றினுடைய போதி கைகள் கீழ்நோக்கிச் சுருளாக வருவதைப்போல் அமைந்துள்ளன.*

**பிரஸ்தரம் (தோள்) :**

*கூரை சமதளமானது. நான்கு புறங்களிலும் கொடுங்கைகள் காணப்படுகின்றன. கொடுங்கைகளுக்கு மேல் உள்ள கைப்பிடிச் சுவர்கள் பஞ்சரங்கள் என்ற சிறு கோயில்களால் அணி செய்யப் பட்டுள்ளன. ஓரங்களில் கூட்டங்களும், நடுவில் சாலைகளும் இடைப்பட்ட பகுதிகளில் யாளி வரிசை, பூதகண வரிசை ஆகிய வற்றுடன் ஆடற் பெண்களும் கலையழகு மிளிர அமைந்துள்ளன.*

*கருவறை, உள் மண்டபம் ஆகியவற்றின் கூரைகள் இரண்டாம் தளத்தோடு இணைந்துள்ளன. முப்பக்கங்களின் விளிம்புகளில் காணப்படும் யாளி வடிவங்களுக்கு மேல் பஞ்சரங்கள் உள்ளன. இதே போன்ற அமைப்பு சாளுக்கியக் கோயில்களில் காணப் படுகின்றன.* [6]

**கிரீவம் (கழுத்து) :**

*நான்கு தளங்களையுடையது. மூன்று தளங்கள் சாலை களாலும், கூடங்களும் பூதகண வரிசைகளாலும் அழகு*

செய்யப்பட்டுள்ளன. சாலைகளுக்கும், கூடங்களுக்கும் நடுவில் இடைவெளி, சோடனையாக அமைந்துள்ளன. இடைவெளிகளில் அழகிய சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. இம்மூன்று தளங்களும் சதுர அமைப்பில் உள்ளன. நான்காம் தளம் வட்ட வடிவமாய்க் காணப்படுகின்றது. இதன் நான்கு திசைகளிலும் விமான கோட்டங் களும் விமான தேவதைகளும் திகழ்கின்றன. இவைகளில் உமா சிவன், வீணை ஏந்திய ஆலமர் அண்ணல் ஆகிய இரண்டு சிற்பங்கள் உள்ளன. இவை முன்பு புதுக்கோட்டை அருங்காட்சி யகத்தில் வைக்கப்பட்டிருந்தன.[7] வட்டமான அடுக்கின் நான்கு புறங்களிலும் கீழேயுள்ள சதுர அடுக்கின் நான்கு மூலைகளுக்கும் ஏற்ற இடங்களில் அழகாகச் செதுக்கப்பட்ட நான்கு நந்திகளின் உருவங்கள் உள்ளன.

**சிகரம் :**

சிகரம் வட்ட வடிவமானது. சிங்க முகங்களுள்ள கூடுகள் இதிலுள்ளன. இது பல்லவ சிற்பமான மகாபலிபுரத்தில் உள்ள தர்மராச இரதத்தின் சிகரத்தை ஒத்திருக்கின்றது.[8]

**ஸ்தூபி :**

வட்டமான ஸ்தூபி காணப்படுகின்றது. இது தற்பொழுது அமைக்கப்பட்டதாகும்.

**அர்த்த மண்டபம் :**

கருவறைக்கு முன், அர்த்த மண்டபம் உள்ளது. அர்த்த மண்டபத்தை ஆறு தனித் தூண்களும், சுவரில் பதித்த ஆறு செவ்வகத் தூண்களும் தாங்குகின்றன. இம்மண்டபத்திலுள்ள தூண்கள் வெளிப்புறச் சுவர்களிலுள்ள தூண்களிலிருந்து மாறுபட்டு பல்லவ பாணியில் மேலேயும், கீழேயும் சதுரமாயும் நடுவில் எட்டுப் பட்டையாகவும் உள்ளன. தூண்களில் தலைப் பாகத்திலுள்ள போதிகை, தரங்கப் போதிகையாகும். இது நடுவில் பட்டை யாகவும், இரு ஓரங்களிலும் சுருள், சுருளாயும், வருவனவாக இருக்கிறது.

அர்த்த மண்டப நுழைவாயிலின், இரு பக்கத்திலும் 5 அடி உயரமுள்ள துவாரபாலகர் சிற்பங்கள் காணப்படுகின்றன. இவைகளில் ஒன்றின் பீடத்தில்தான் சாத்தம் பூதியின் கல்வெட்டுக் காணப்படுகின்றது.

**நந்தி மேடை :**

கர்ப்பக் கிரகத்தின் முன்பாக நந்தி மேடை இருக்கிறது. இது தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் சீர்செய்யப்பட்டு அமைக் கப்பட்டதாகும்.

**சுற்றுக் கோயில்கள் :**

பரிவாரத் தெய்வங்களுக்கான கோயில்களாக ஆறு சிறிய சுற்றுக் கோயில்கள் இங்கு காணப்படுகின்றன. இவற்றில் சதுரமான கருவறை, அர்த்த மண்டபத்துடன் கூடியதாக ஐந்து கோயில்களும், ஒரு கோயில் மட்டும் கருவறையை மட்டும் கொண்டு அமைந் துள்ளன. ஒரு தளத்தையுடைய விமானத்தைக் கொண்டவையாய் அனைத்தும் தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் பாதுகாக்கப்பட்டு அழகுடன் வீற்றிருக்கின்றன. இவை முற்காலச் சோழர்களின் மரபுப்படி அமைக்கப்பட்டிருக்கின்றன. [9]

இச்சுற்றுக் கோயில்களின் எண்ணிக்கை ஏழாக இருந்திருக்கும் என்பார் கோ. தங்கவேலு. [10] இவை துர்கா, சப்தமாந்தர்கள், கார்த்திகேயன், கணேசர், சாஸ்தா, சந்திரன், சேஷ்டா போன்ற தெய்வங்களுக்கானதாகும். [11]

துர்கா, சாஸ்தாவிற்குப் பதிலாக, சூரியன் சண்டேசுவரர் என்ற தெய்வங்களைக் குறிப்பிடுவர் எம் இராதாகிருஷ்ண பிள்ளை. [12]

**பழியிலி ஈசுவரம் (குடைவரைக் கோயில்) :**

விசயாலய சோழீச்சுரத்தின் எதிராக உள்ள இரண்டு குடைவரைகளில், தெற்காக உள்ள குடைவரை 'பழியின் ஈசுவரம்' என அழைக்கப்படுகின்றது.

இக்குடைவரை 8 அடி நீளமும், 7 அடி 6 அங்குலம் அளவு அகலமும், 6 அடி 8 அங்குலம் உயரமும் உள்ள கருவறையைக் கொண்டுள்ளது.

மேலேயுள்ள மணிக்கோவையின் மேல் பூதகணங்களின் நடனமாடும் வரிசை செதுக்கப்பட்டள்ளது. உட்புறத்தில் உருளை வடிவமான சிவலிங்கமும் இரு துவாரபாலகர்களும் கல்லில் செதுக்கப்பட்டுள்ளன. முன் மண்டபம், அடித்தளத்துடன் மட்டும் காணப்படுகின்றது. இதில் நந்தி சிலையும் பலிபீடமும் உள்ளன.

இக்குடைவரை கிழக்கு நோக்கியுள்ளது. உயர்ந்த செங்குத்து மலையில் இதன் தோற்றம் மிக அழகையும், பக்தியைத் தரக் கூடியதாகவும் அமைந்துள்ளது.

**ஜ்வரகரேசுவரர் சுனைக் கோயில் (தலவரசிங்கம்) :**

விசயாலய சோழீச்சுரத்திற்குப் பக்கமாக இரண்டு சுனைகள் காணப்படுகின்றன. அவை 1) தளும்பு சுனை 2) தலவரசிங்கம் என்பதாகும். ‘தளும்பு சுனை’ எந்நேரமும் தழும்பிக் கொண்டே இருப்பதால் இப்பெயர் பெற்றது.

‘தலவரசிங்கம்’ என்ற சுனைக்குள் கருவறை, அர்த்த மண்டபத்துடன் கூடிய சிவன் கோயில் குடையப்பட்டுள்ளது. ‘ஜ்வரகரேசுவரர்’ என இவ்விறைவன் அழைக்கப்படுகின்றார். அதே குடைவரைப் பாறையில் செதுக்கப்பட்டதாக இலிங்கம் அமைந்துள்ளது.[13]

**நகரீசுவரம் :**

கடம்ப மலையில், திருக்கடம்பூர் உடைய நாயனார் கோயிலுக்கு எதிராக இச்சிவன் கோயில் உள்ளது. இக்கோயிலின் கருவறை, அர்த்த மண்டபம் இரண்டும் சதுர வடிவினதாய்க் காணப்படுகின்றது. விமானம் இல்லை. கருவறைச் சுவரில் தேவகோட்டமோ, சிற்பங்களோ இல்லை.

கருவறையின் உள்ளே, உருண்டை வடிவ இலிங்கம், சதுர ஆவுடையாரில் பொருத்தப்பட்டுள்ளது.

நந்தி மேடை, அர்த்த மண்டபத்தின் முன் காணப்படுகின்றது. இதில் நந்தியும், பலிபீடமும் இருக்கின்றன.

இதன் அருகாமையில், மங்களாம்பிகை கோயில் அழகுடன் கட்டப்பட்டிருக்கிறது. இக்கோயிலுக்கு எதிரில் இயற்கையாய் அமைந்த குளம் ஒன்று காணப்படுகிறது.

இம்மலையில், திருக்கடம்பூர் உடைய நாயனார் கோயிலும், நகரீசுவரமும் மங்களாம்பிகை கோயிலும், ஒரே இடத்தில் அமைந்துள்ளன. பெரும்பாலான நார்த்தா மலைக் கல்வெட்டுக்கள் இங்குதான் காணப்படுகின்றன.

**திருக்கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயில்:**

கோட்டை மலைக்குப் பக்கத்திலுள்ள கடம்பர்மலைக் குன்றின் அடிவாரத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. ‘திருக்கடம்பூர் உடைய நாயனார்’ என்னும் இத்தெய்வத்தின் பெயரே மலைக்குப் பெயராக இடப்பட்டுள்ளது.

மேற்கு நோக்கியமைந்த இப்புனிதத் தலமானது கருவறை, அர்த்த மண்டபம், முன் மண்டபம், திருச்சுற்று போன்றவற்றைக் கொண்டு காணப்படுகின்றது.

**கருவறை :**

சதுரமான கருவறை, மேற்கு நோக்கியவாறு அமைந்துள்ளது. மூலவராக, ‘‘திருக்கடம்பூர் உடைய நாயனார்’’ இலிங்க வடிவில் வீற்றிருக்கின்றார். இலிங்கம் சதுர ஆவுடையாரில் இருக்கின்றது. சுயம்பு லிங்கம் போல் காட்சி தந்தாலும், மலையினின்று விடுபட்ட உள்ளது.

இக்கோயிலின் கருவறையும், அர்த்த மண்டபமும், பால சுப்பிரமணியர் கோயிலை ஒத்துக் காணப்படுகின்றது. [14] மேலும் காஞ்சியிலுள்ள சொக்கேசுவரர் கோயிலைப் போன்றும், விராலூரி லுள்ள பூமிசுவரர் கோயிலைப் போன்றும் காணப்படுகின்றது. [15]

**விமானம் :**

விமானத்தின் ஆறு உறுப்புக்களாகிய அதிஷ்டானம், சுவர், பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி ஆகியவற்றைப் பெற்று இக்கோயில் விமானம் அழகுடன் திகழ்கின்றன.

**அதிஷ்டானம் :**

கட்டிடத்தில் அடித்தளம் அதிஷ்டானம் எனப்படும். உபபீடம் எவ்வித வேலைப்பாடுகளுமின்றி உள்ளது. அதிஷ்டானத்தின் உறுப்புகள் சிலவற்றுடன் கட்டப்பட்டுள்ளன.

**சுவர் :**

கருவறையின் மூன்று வெளிப்புறச் சுவர்களும், அரைத் தூண்களைக் கொண்டுள்ளன. இத்தூண்கள் திருக்கட்டளை சுந்த ரேசுவரர் கோயில் நூல்களையும், கண்ணனூர் பாலசுப்பிரமணியர் கோயில் தூண்களையும் ஒத்துக் காணப்படுகின்றது என்பார் திரு. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியன்.[16]

அரைத்தூண்கள் கால், கலசம், கும்பம், பலகை என்ற உறுப்பு களை உடையதாகும். கருவறையில் மூன்று புறச்சுவர்களிலும் தேவகோஷ்டங்கள் உள்ளன. அவற்றில் தற்பொழுது தென் கோஷ்டத்தில் மட்டும் அழகிய தெட்சிணாமூர்த்தி சிலை உள்ளது. இது இசைக் கல்லால் ஆனதாகும். போதிகை கோள வடிவ முடையது. கொடுங்கைக்குக் கீழ் பூதகணமும், கொடுங்கைக்கு மேல் யாளி வரிசையும் உள்ளன.

**பிரஸ்தரம் :**

இது சுவர்களுக்கிடையில், அறையை மூடி நிற்கும் உறுப்பாகக் காணப்படுகின்றது. நான்கு மூலைகளிலும் இடபச் சிலைகள் இருக்கின்றன.

**கிரீவம் :**

இப்பகுதியின் நான்கு புறங்களிலும் கூடுகளால் அலங்கரிக் கப்பட்ட தேவகோஷ்டங்கள் உள்ளன. இவை பிற்காலத்தில் சுதையால் அலங்காரமாகச் செய்யப்பட்டுள்ளன. இவை நான்கிலும் தற்பொழுது சிதைந்து போன சுதைச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

**சிகரம் :**

சிகரம் மணி போன்ற உருவத்தையுடையது. வட்டவமானதாகக் காணப்படுகின்றது. எனவே இது வேசர சிகரமாகும்.

**ஸ்தூபி :**

*சிகரத்தில் மேல் கல்லால் ஆன குடம் போன்ற உருண்டை வடிவ ஸ்தூபி காணப்படுகின்றது.*

**அர்த்த மண்டபம் :**

*கருவறையின் முன்னுள்ள இம்மண்டப விதானத்தில் ஒரு சன்னல், ஒளி புகுவதற்காக அமைக்கப்பட்டுள்ளது. அர்த்த மண்டபத்தின் புறச் சுவர்களில் தேவகோஷ்டங்கள் காணப்படுகின்றன. ஆனால் சிலைகள் ஏதுமில்லை. மண்டபத்தின் முன் இரு துவார பாலகர்கள் நிற்கின்றனர். அர்த்த மண்டபத்துடன் முன் மண்டபம் பிற்காலத்தில் இணைக்கப்பட்டிருக்கின்றது.*

**முன் மண்டபம் :**

*சதுர அமைப்பினை உடைய இம்மண்டபத்தின் ஒரு பக்கம் மலையில் அடிவாரமாகக் காணப்படுகின்றது. மலையுடன் ஒட்டி மண்டபம் எழுப்பப்பட்டுள்ளது. மலையிலேயே குடையப்பட்ட சிவ லிங்கமும், தனியே காணப்படும் அம்பாள் சிலையும் இம் மண்டபத்தின் வடக்கே காணப்படுகின்றன. மலையில் குடைந்த சுரங்கப்பாதைக்குச் செல்லும் ஒரு அறையும் இதனை ஒட்டியுள்ளது. இச்சுரங்கப்பாதை தற்பொழுது அடைக்கப்பட்டு விட்டது.*

*ஒன்பது தூண்கள் இம்மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன. இதில் ஆறு தூண்கள் ஒரே அமைப்பாகவும் மற்ற மூன்று தூண்கள் செம்மையுறச் செய்யாமல் பாதி வேலைப்பாடுடன் இருக்கின்றன. தூண்கள் மேலும், நடுவிலும், அடியிலும், சதுரமாகவும் இதற்கு இடையில் 16 பட்டையாகவும் வடிக்கப்பட்டுள்ளன.*

*இம்மண்டபச் சுவரில் கிழக்காகவும், தெற்காகவும் இரு பாதைகள் திருச்சுற்றுக்காக அமைந்துள்ளன. மேற்காக உள்ள நிலை, கோயிலின் நுழைவாயிலாகவும் இருக்கின்றது.*

*கோயிலுக்குள் உள்ள மலை அடிவாரத்தில் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவற்றில் முதல் இராசராசக் காலத்துக் கல்வெட்டுக்கள் முதன்மையானதாகும்.*[17]

**திருச்சுற்று :**

*கருவறை, அர்த்தமண்டபத்தைச் சுற்றி இரண்டு பக்கத்திலும் திருச்சுற்று மண்டபம் அமைந்துள்ளது. இம்மண்டபம் பல தூண்களைப் பெற்றுள்ளது. இவற்றில் பல பரிவார தெய்வங்களின் சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. இத்திருச்சுற்று மண்டபத்தில் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. மலை அடிவாரத்தில் இரு சண்டிகேசுவரர் சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன.*

*சூரியன், பைரவர், அம்பாள், சப்தமாதர்கள், பிரும்மா, விநாயகர், சேஷ்டா, வீணாதர தெட்சிணாமூர்த்தி போன்ற சிலைகள் திருச்சுற்று மண்டபத்தில் காணப்படும் சிலைகளாக இருக்கக் கூடும். சிலைகள் சிதைந்து இருப்பதால் தெளிவாகக் கூறஇயலவில்லை.*

*கிழக்குப் புறமாக உள்ள திருச்சுற்று மண்டபத்தில் 12 தூண்கள் இரு வரிசையாகவும், தெற்குப்புறத் திருச்சுற்று மண்டபத்தில் 11 தூண்களும் உள்ளன.*

*நந்தியும், பலிபீடமும் கோயிலின் முன்பு உள்ள மேடையில் அழகுடன் அமைந்துள்ளன. கொடிமரம் இருந்த பீடமும் காணப்படுகின்றது.*

**திருவானைக்கா ஈஸ்வரம் :**

*நார்த்தாமலை நகரின் நடுவாக இத்திருக்கோயில் அமைந் திருக்கின்றது. இக்கோயில் கருவறை, விமானம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், முன் மண்டபம் மற்றும் திருச்சுற்றுக் கோபுரம் போன்றவற்றுடன் அம்மன் சன்னதியுடனும் காணப்படுகின்றது.*

**கருவறை :**

*கருவறை சதுரமாய்க் கிழக்கு நோக்கி அமைந்திருக்கிறது. மூலவராக 'ஜம்புகேசுவரர்' சதுரமான ஆவுடையாரில் இலிங்க வடிவில் (உருண்டை) வீற்றிருக்கின்றார். கருவறை வாயிலின் நிலைகளாக இரண்டு அரைத் தூண்கள் பூவேலைப்பாடுகளுடன் அமைந்து அழகு செய்கின்றன.*

**விமானம் :**

இத்திருக்கோயிலின் விமானம், அதிஷ்டானம், சுவர், பிரஸ்தரம், கிரீவம், சிகரம் ஆகிய பகுதிகளைக் கொண்டு காணப் படுகின்றது. முன்பு சிதைந்துபோய் இருந்த இரண்டாம் தளம் தற்பொழுது நன்கு சீரமைக்கப்பட்டிருக்கின்றது.

**அதிஷ்டானம் :**

அதிஷ்டானமானது உபபீடம், பத்மம், கபோதம் முதலிய பாகங்களைக் கொண்டுள்ளது. அவற்றில் உபபீடம் எவ்வித வேலைப்பாடுமின்றி எளிமையாகவும், அதனின் மேல் காணப்படும் பத்மம் விரிந்து வரியாகவும் அமைக்கப்பட்டுள்ளது. பத்மத்தை அடுத்து தேவகோட்டத்தின் அடிப்பாகமாகக் கபோதம் காணப்படுகின்றது.

**சுவர் :**

அதிஷ்டானத்தின் மேல் காணப்படும் இப்பகுதியில் நீண்ட பலகையுடன் கூடிய அரைத் தூண்களும் தேவகோஷ்டங்களும் உள்ளன. கருவறையின் தெற்கு, வடக்குப் புறச் சுவரில் எட்டு அரைத் தூண்களும், மேற்குப் புறச் சுவரில நான்கு அரைத் தூண்களும் கம்பீரத் தோற்றத்தைத் தருகின்றன. தென்புறத் தேவகோஷ்டத்தில் தெட்சிணாமூர்த்தியும், மேற்குப்புறத் தேவகோஷ்டத்தில் அர்த்தநாரீஸ்வரரும் காணப்படுகின்றனர்.

தெட்சிணாமூர்த்திக்கு முன், இரண்டு தூண்களெடுத்துச் சிற்றாலயம் உள்ளது. மேற்குத் தேவகோஷ்டத்தின் முன் ஒரு மேடை போடப்பட்டுள்ளது.

**பிரஸ்தரம் :**

இப்பகுதியில் கர்ணகூடுகள் உள்ளன. இதற்குள் எவ்வித உருவங்களும் காணப்படவில்லை. இதன் மேல் யாளி வரிசை யானது மிக அழகிய வேலைப்பாடுகளுடன் அமைக்கப்பட்டிருக் கின்றன.

*விமானத்தில் இம்மூன்று பகுதியிலுள்ள வெள்ளைக் கற்களில் எண் போடப்பட்டுள்ளது. எனவே இக்கோயிலை பிரித்து மீண்டும் கட்டி இருக்கலாம் என எண்ணத் தோன்றுகின்றது.*

*அதிஷ்டானம், சுவர், பிரஸ்தரம் ஆகிய இம் மூன்றும் முதல் தளம் ஆகும். கிரீவம், சிகரம் ஆகியவை இரண்டாம் தளமாக உள்ளது. முதல் தளம் வெள்ளைக் கற்களாலும் இரண்டாம் தளம் சுதையாலும் கட்டப்பட்டுள்ளன.*

**கிரீவம் :**

*கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் நந்தி சிலைகள் உள்ளன. நான்கு திசைகளிலும் திசைக்கு ஒன்றாக, நான்கு கோட்டங்கள் அமைக் கப்பட்டுள்ளன. அவைகளில் தெற்குக் கோட்டத்தில் தெட்சிணா மூர்த்தியும், மேற்குக் கோட்டத்தில் 'அம்பாளும்', வடக்குக் கோட்டத்தில் 'பிரம்மாவும்', கிழக்குக் கோட்டத்தில் சிவபெருமானும் சுதைச் சிறப்பங்களாக வடிக்கப்பட்டுள்ளனர். கிரீவத்தின் மேலே கோஷ்டபஞ்சரங்கள் அமைந்துள்ளன.*

**சிகரம் :**

*இப்பகுதி வட்ட வடிவமானதாக உள்ளது.*

**அர்த்த மண்டபம் :**

*கருவறைக்கு முன் அமைந்துள்ள, இம் மண்டபம் செவ்வக வடிவினை உடையது. இம்மண்டப வாயிலில் உள்ள அரைத் தூண்கள் பூவேலைப்பாடுகளுடன் காட்சி தருகின்றன. அர்த்த மண்டபப் புறச்சுவரில் உள்ள தேவகோஷ்டத்தில் எத்தெய்வமும் இல்லை.*

**மகாமண்டபம் :**

*அர்த்தமண்டபத்திற்கு முன் இம்மண்டபம் இருக்கின்றது. சதுரவ வடிவினை உடையதாகவும், நான்கு பெரிய தூண்களை உடையதாகவும் உள்ளது. சுவரை ஒட்டி இரு மேடைகள் கட்டப் பட்டுள்ளன. மண்டபத்தின் நடுவில் நந்தியும், பலிபிடமும்*

இறைவனைப் பார்த்து அழகுடன் காணப்படுகின்றன. கோபுரத் திற்குப் பக்கத்திலுள்ள நந்தியையும், அம்மன் சன்னதிக்கு முன் உள்ள நந்தியும் ஒரே அமைப்புடன் காணப்படுகின்றன. புறச் சுவர்களில் கல்வெட்டக்கள் உள்ளன.

**முன் மண்டபம் :**

இம்மண்டபத்தை 12 தூண்கள் தாங்கி நிற்கின்றன. மண்டபத்தில் தெற்கு, வடக்குப்புறமாக அமைக்கப்பட்டுள்ளது. தூணின் மேல் பகுதியும், கீழ்ப்பகுதியும் நடுப்பகுதியும் சதுர மாகவும், இடையில் 16 பட்டைகளுடன் செதுக்கப்பட்டுள்ளன. சதுரமான பகுதியில் பூவேலைப்பாடுகள் சிற்பிகளின் திறனைக் காட்டும் வண்ணமாக அமைந்திருக்கின்றன.

இம்மண்டபத்தில் விநாயகர் சிலை இரண்டும் நாகர் சிலை இரண்டும், முருகன், பைரவர், தண்டபாணி ஆகியோரின் சிலை களும் உள்ளன. இச்சிலைகள் அனைத்தும் கிழக்குப் பார்த்து இருக்கின்றன. இதன் முன் நவக்கிரக சிலைகள் உள்ள மேடை, வடக்குப் புறமாக, நான்கு தூண்களுக்கிடையில் இருக்கிறது. மகாமண்டபத்தை ஒட்டினாற்போல் இரு துவாரபாலகர்கள் நிற்கின்றார்கள்.

**திருச்சுற்று :**

இத்திருக்கோயிலில் ஒரு திருச்சுற்று அமைக்கப்பட்டுள்ளது. கோபுரத்தின் அடியிலிருந்து ஆரம்பிக்கும் திருச்சுற்று சுற்றிலும் உள்ளது. தென்கிழக்கு மூலையில் மடைப்பள்ளியும் இதற்கு அடுத்தாற்போல் பண்டகசாலையும், இத்திருச்சுற்றிலேயே அமைந் துள்ளன. வடக்குப்புறத் திருச்சுற்றில் வாகன அறைகள் கட்டப் பட்டிருக்கின்றன. கோபுரத்தின் அடியில், ஆபரண அறை பாதுகாப்பாக உள்ளது. இவ்வறைகளைத் தவிர இருக்கும் திருச்சுற்று மேடையில் தூண்கள் ஏதும் இல்லாமல் மேடையாகவே இருக்கின்றன. சிதைந்த நிலையில் பல சிலைகள் இந்த மேடையில் காணப்படுகின்றன.

*தென்மேற்கு மூலையில் தற்பொழுது விநாயகருக்கு என்று ஒரு சிற்றாலயமும், வடமேற்கு மூலையில் முருகனுக்கு என்று ஒரு சிற்றாலயமும் கட்டப்பட்டிருக்கின்றன. கருவறையின் வடக்குப்புறம் சண்டிகேசுவரருக்கு ஒரு சிற்றாலயம் முறைப்படி உள்ளது.*

**கோபுரம் :**

*கோபுரம் பெரிய நிலைகளுடன் அமைந்திருக்கின்றது. அதிஷ்டானம், சுவர், பிரஸ்தரம் போன்ற அமைப்புடன் உள்ளது. இதற்கு மேல் கோபுரம் கட்டப்படவில்லை.*

*இக்கோபுரத்தின் பிரஸ்தரத்தில் யாளி வரிசையும் கூடுகளும் அழகு செய்கின்றன. அரைத்தூண்கள் நீண்ட பலகையுடன் போதிகைகளைக் கொண்டு காணப்படுகின்றன.*

*கோபுரத்தின் அடியில் இரு கருப்பர் சிலைகள் வைக்கப் பட்டுள்ளன. ஒரு சிலை மிகத் திருத்தமாகவும், மற்றொரு சிலை திருத்தமில்லாமலும் உள்ளன. திருத்தம் உள்ள தெற்குப் பக்கமுள்ள இக்கருப்பர் மலையாளக் கருப்பர் ஆவார்.*

**நந்தி மண்டபம் :**

*கோபுரத்திற்குப் பக்கமாக 'ஜம்புகேசுவரை' நோக்கியபடி இம்மண்டபம் உள்ளது. நான்கு தூண்களுடன் உள்ள மண்ட பத்தில், நந்தியும் பலிபீடமும் உள்ளது.*

**ஸ்ரீ அகிலாண்டீஸ்வரி அம்மன் சன்னிதி :**

*ஜம்புகேசுவரர் சன்னிதிக்கு எதிராகத் தெற்கு நோக்கி அம்மன் சன்னிதி இருக்கின்றது. இது கருவறை, அர்த்தமண்டபம், மகா மண்டபம், முன் மண்டபத்துடன் காணப்படுகின்றது.*

**கருவறை :**

*கருவறைக்குள் அம்பாள் நின்ற கோலத்துடன் காட்சி தருகின்றாள். கருவறையின் நுழைவாயிலில் இரண்டு அரைத் தூண்கள் உள்ளன.*

**விமானம் :**

அதிஷ்டானம், சுவர், பிரஸ்தரம் என்ற பகுதிகளான முதல் தளம் மட்டுமே உள்ளது. இரண்டாம் தளம் காணப்படவில்லை.

**அதிஷ்டானம் :**

உபபீடம் எவ்வித வேலைப்பாடும் இன்றி எளிமையாக இருக்கின்றது. இதன் மேல் பத்மவாரி உள்ளது.

**சுவர் :**

கோட்டமும், கோட்ட பஞ்சரமும், அரைத் தூண்களும் சிறந்த வேலைப்பாடுகளுடன் செய்யப்பட்டிருக்கின்றன. கோட்ட பஞ்சரத்தில் கூடுகளும், யாளி வரிசையும், அதன் மேல் ஒரு பெண் நடனமாடும் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளது. கருவறைக் கோட்டத்தில் விநாயகர் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. கருவறைக் கோட்டமும் அர்த்தமண்டக் கோட்டமும் வெவ்வேறு வடிவிலுள்ளன.

அரைத் தூண்களுக்கிடையில் பக்கத்திற்கு இரண்டு பன்னீர் செம்பு போன்று வடிவுடைய அரைத் தூண்கள் காணப்படுகின்றன.

இத்திருக்கோயின் கருவறை, அர்த்த மண்டபம் போன்றவை 'ஜம்புகேசுவரர்' கருவறை, அர்த்த மண்டபத்தைப் போன்று இல்லை.

**மகா மண்டபம் :**

அர்த்த மண்டபத்தை அடுத்து மகா மண்டபம் காணப்படுகின்றது.

**முன் மண்டபம் :**

10 தூண்களுடன் கூடிய இம்மண்டபம் ஒட்டுக் கொட்டகையாக உள்ளது.

ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி சன்னதிக்கு வடமேற்கு மூலையில் கிணறு ஒன்று காணப்படுகின்றது. சன்னிதிக்கு எதிராகப் பழைய சிதைந்த நந்தி சிலை ஒன்றும் காணப்படுகின்றது.

*ஜம்புகேசுவரர் சன்னிதியையும், ஸ்ரீ அகிலாண்டேசுவரி சன்னிதியையும் சுற்றிப் பெரிய மதில் சுவர் எழுப்பப்பட்டுள்ளது. கிழக்குப் புறமாகவும் தெற்குப் புறமாகவும் வாயில்கள் உள்ளன.*

**தொகுப்புரை :**

★ *நார்த்தாமலை சிவன் கோயில்களில் நான்கு கோயில் கற்றளிக் கோயிலாகவும், ஒன்று குடவரைக் கோயிலாகவும், ஒன்று சுனைநீர்க் கோயிலாகவும் ஆக ஆறு கோயில்கள் உள்ளன.*

★ *விசயாலய சோழீச்சுரம் மேற்குப் பார்த்த நிலையில் உள்ளது. இதைச் சுற்றி ஆறு சுற்றுக் கோயில்கள் இருக்கின்றன.*

★ *பழியிலி ஈசுவரம் கிழக்கு நோக்கிக் காணப்படுகின்றது. அர்த்தமண்டபத்தில் இரு துவாரபாலகரும், நந்தியும், பலிபீடமும் காணப்படுகின்றன.*

★ *ஜ்வரகரேஸ்வரர் சுனைக்குள் கோயிலாக உள்ளது. லிங்கம் பாறையிலேயே அடிக்கப்பட்டது.*

★ *திருக்கடம்பூர் உடைய நாயனார் கோயில் கருவறை, அர்த்த மண்டபம், முக மண்டபம், திருச்சுற்று மண்டபம் போன்ற வற்றுடன் அழகுடன் வீற்றிருக்கின்றது.*

★ *நகரீசுவரம் சதுர வடிவமுடையது. கருவறை அர்த்த மண்டபத்துடன் உள்ளது.*

★ *திருவானைக்கா ஈஸ்வரம் ஊரின் மையப் பகுதியில் அமைந்துள்ளது.*

★ *சுவாமி சன்னிதி தனியாகவும், அம்மன் சன்னிதி தனியாகவும் உள்ளது. அம்மன் சன்னிதி பிற்காலத்தில் கட்டப்பட்டதாகும்.*

**அடிக்குறிப்புகள்**

1. நடன காசிநாதன், ‘முத்தரையர்கள்’, பக். 92-93.
2. டாக்டர் துளசி இராமசாமி, ‘‘தமிழகக் கலைச் செல்வங்கள்’’, ப.64
3. செல்வி க.அ. புவனேஸ்வரி, ‘‘அன்னூர் வரலாறு’’, ப. 114

4. செல்வி க.அ. புவனேஸ்வரி, ''அன்னூர் வரலாறு'', ப. 114
5. கோ. தங்கவேலு, ''இந்தியக் கலை வரலாறு'', ப. 486.
6. பேரா. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, ''சோழர்கள்-2'', பக். 951 - 952.
7. மு. நளினி, ''வாழ்வியல் களஞ்சியம்-11''
8. ஜே.எம். சோமசுந்தரம் பிள்ளை, ''சோழர் கோயில் பணிகள்'', ப. 19
9. மு. நளினி, ''வாழ்வியல் களஞ்சியம்-11''
10. கோ. தங்கவேலு, ''இந்தியக் கலை வரலாறு'', ப. 486.
11. கோ. தங்கவேலு, ''இந்தியக் கலை வரலாறு'', ப. 486.
12. எம். இராதாகிருஷ்ண பிள்ளை, ''தென்னாட்டுக் கோயில்கள்'', ப. 154
13. கோ. பாலகிருஷ்ண காந்தி, இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1044.
14. மேலது, ப. 1045.
15. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியன், ''சோழர் கலைப்பாணி'', ப. 126.
16. மேலது, ப. 50
17. கோ. பாலகிருஷ்ண காந்தி, இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1045.



# பழமம் சிற்பம் ஓவியம்

**நா**ர்த்தாமலை சிவன் கோயில்களில் காணப்படும், படிமத் திருவுருவங்கள், சிற்பங்கள் மற்றும் ஓவியங்கள் போன்றவை இக்கோயில்களின் கலைத்துவத்தைக் காட்டி நிற்கின்றன. அவைகளைப் பற்றிக் காணலாம்.

நார்த்தாமலையில் காணப்படும் ஆறு சிவன்கோயில்களிலும் மூலவர்கள் இலிங்கத் திருமேனியாகக் காட்சி தருகின்றனர். விசயாலய சோழீச்சுரம், பழியிலி ஈசுவரம் ஆகிய இரண்டு கோயில்களில் காணப்படும் இலிங்கத்தில் ‘இலட்சனோத்தாரம்’ குறிக்கப்பட்டுள்ளது.

‘இலட்சணம்’ என்றால் அடையாளம். ‘தாரம்’ என்றால் அமைத்தல். அதாவது, வட்டவடிவ பாணத்தில் முகம், முன்பக்கம் எது எனக்காட்டும் அடையாளமாகும்.

பாண உயரத்தில் மூன்றில் ஒரு பங்கு உச்சிப் பகுதியை நீக்கி, அடி இரு பங்கை எட்டுப் பகுதியாக்கி, அடி இரு பங்கை நீக்கி நடுவிலுள்ள ஆறு பாகத்தில் ‘முகம்’ அமைக்கப்படும். பாணத்தின் அளவு தோற்றத்தினால் இவை எட்டு வகையாகப் பிரிக்கப் பட்டுள்ளது. [1]

விசயாலய சோழீச்சுரம், பழியிலி ஈசுவரம் ஆகியவற்றில் காணப்படும் இலிங்கம் ‘சைவாதி லிங்கம்’ ஆகும்.

ஜ்வரகரேசுவரர் சுனைக்கோயிலில் உள்ள இலிங்கம், அதே பாறையில் செதுக்கப்பட்ட இலிங்கமாக உள்ளது.[2]

திருக்கடம்பூர் உடைய நாயனார் கோயிலில் காணப்படும் இலிங்கத் திருமேனியானது சதுர ஆவுடையாரில் பொருத்தப் பட்டுள்ளது. இலிங்கம் மலையிலேயே உண்டான சுயம்பு இலிங்கமாக இருக்கலாம். இது தற்பொழுது சிதைந்துபோய் மலையிலிருந்து துண்டிக்கப்பட்டிருக்கிறது.

நகரீசுவரம் திருக்கோயிலில் உள்ள இலிங்கத்தில் எந்த அடையாளச் சின்னமும் காணப்படவில்லை. இலிங்கம் சதுர ஆவுடையாரில் உள்ளது. இச்சதுரமான ஆவுடையாரில் மூன்று சதுரங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இவை பிரம்மன், சிவன், விஷ்ணு ஆகியோர்களுக்கான இடமாகக் கொள்ளப்படும்[3] என்பார் டாக்டர் தே. சொக்கலிங்கம் அவர்கள்.

திருவானைக்கா ஈசுவரத் திருக்கோயில் மூலவரான ஜம்புகேசு வரரின் இலிங்கத் திருமேனி வட்ட ஆவுடையாரில் காணப்படு கின்றது.

மேலே கூறப்பட்ட ஐந்து ஆவுடையாரிலும் நீரை வெளியேற்ற கோமுகி அமைக்கப்பட்டிருக்கின்றன. இலிங்கம் அமைக்கப்பட்ட பீடம், பிண்டிகை, ஆவுடையார் என்ற உறுப்புக்களால் ஆனது.

### அகிலாண்டேசுவரி அம்மனின் திருவுருவ அமைதி :

அகிலாண்டேசுவரி அம்மை பீடத்தின் மேல், இரு கைகளுடன் தெற்கு நோக்கி நின்ற நிலையில் காட்சி தருகின்றாள். சுரண்ட மகுடம் தரித்துள்ளாள். வலதுகை நீலோற்பவ மலரைப் பிடித்த நிலையிலும், இடது கை தொங்க விட்ட நிலையிலும் காணப் படுகின்றது. அம்மனைச் சுற்றித் திருவாச்சி அழகுடன் அமைக்கப்பட்டிருக்கின்றது.

### சிற்பத் திருவுருவ அமைதிகள் :

விசயாலய சோழீச்சுரம் கோயிலின் அர்த்த மண்ட வாயிலில் இரு துவாரபாலகர்கள் சிற்பங்கள் காணப்படுகின்றன. இவை ஐந்து அடி உயரமுடையதாகும். இரண்டு கைகள் ஒரு கையில் கதை

உள்ளது. மற்றொரு கையானது வியப்புக்குறியினைக் காட்டி நிற்கின்றது. தலையில் சடாமகுடம், கொம்பு போன்ற வளைவு களும் காணப்படுகின்றன. இக்கொம்புகள் பல்லவர் தம் குகைக் கோயில்களில் காணப்படும் . துவாரபாலகர்களுக்கு இருப் பதைப் போல் இருக்கின்றது. [4] காதில் பனையோலைக் குண்டலம், கடிபந்தம், உகரபந்தம், சிறுமணிகளால் ஆன முப்புரிநூல், காப்பு போன்றவை மிக்க எழிலுடன் அமைக்கப்பட்டிருக்கின்றன.

பல்லவர் காலத்துச் சிவன் கோயில்களிலுள்ள துவாரபாலகர் களைப் போலவே இவர்களின் உடைகளும் அணிகலன்களும் காணப்படுகின்றன. [5]

விமானத்தின் கீரிவப் பகுதியில், விமான தேவகோட்டமாக, உமா சிவனும், வீணை ஏந்திய ஆலமர் அண்ணலும் இருக்கின்றனர்.

**உமா சிவன் :**

சிவபிரான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐவகைத் தொழில் இயற்ற உமையோடு பொருந்திய வடிவமிது [6] அம்பிகையை இடது பக்கம் அமரச் செய்து, சிவன் அமர்ந்து இருக்கின்றார்.

**வீணை ஏந்திய ஆலமர் அண்ணல் :**

நான்கு கைகளில், முன் இரண்டு கைகள் வீணையினை ஏந்தி இருக்கின்றன. பின்னிரு கைகளில் என்ன இருக்கின்றது எனத் தெரியவில்லை. முப்புரிநூல் போட்டுள்ளார். அணிகலன்கள் நிறையப் போட்டுள்ளார். கைகளில் காப்பு அணிந்துள்ளார்.

அதிட்டானப் பகுதியில், இரு பெண்கள் சேர்ந்து நின்று நடனமாடும் நிலைகளில் வெவ்வேறான நடன முத்திரையைக் காட்டி, பல சிற்பங்கள் கோயிலைச் சுற்றிச் செதுக்கப்பட்டள்ளன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான நெளிவுகளை வெளிப் படுத்துகின்றன.

இதேபோல், க்ரீவத்தில் மூன்றாம் அடுக்கில் தனித்தனியான பெண்சிற்பங்கள் நடன முத்திரைகளைக் காட்டி அழகு செய் கின்றன. இவ்விதமான சிற்பம் கோயிலின் நான்கு பக்கமும் ஐந்து ஐந்து சிற்பங்கள் உள்ளன.

பழியிலி ஈஸ்வரத்தின் முன் இரு துவாரபாலகர்கள் சிற்பம், தனியாகத் திரிபங்க நிலையில், மகேந்திரவர்மன் பாணியில் இருக்கின்றன.[7] இவை இரண்டு கைகளைக் கொண்டனவாக அமைந்துள்ளன. ஒரு கை அபயகஸ்தமாகவும், மற்றொரு கை கதையிலும் உள்ளது. சிறுமணிகளால் ஆன மாலை, முப்புரிநூல் காப்பு போன்றவற்றுடன் அழகு மிளிர இச்சிற்பங்கள் உள்ளன. இவர்கள் இருவரின் தலையணிகள் வேறு வேறு முறையில் அமைக்கப்பட்டள்ளன.[8]

குடைவரைக்கு முன்னுள்ள மண்டபத்தில், நந்தி, பலிபீடம் காணப்படுகின்றன. இம்மண்டப அதிட்டானத்தில் காணப்படும் பூதகண வரிசைகள் மெய்ப்பாட்டை வெளிக்காட்டும் நிலையில் வெவ்வேறு விதமாகச் செதுக்கப்பட்டுள்ளன.

**திருக்கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயில் சிற்பங்கள் :**

இக்கோயிலில் உள்ள துவாரபாலகர்கள் இரு கைகளுடன் உள்ளனர். ஒரு கை தர் முத்திரையினைக் காட்டிக் கொண்டும் மற்றொரு கையானது, இருவரும் வேறு வேறு விதமாகவும் வைத்துள்ளனர். இடதுபக்கத் துவாரபாலகர் கதையின் மேல் இடக்கையை வைத்துள்ளார். வலதுபக்கத் துவாரபாலகர் இவ்விதமாக இல்லை. பூணூல் அணிந்திருக்கின்றனர். நீண்ட முத்துமாலை கால்வரை போடப்பட்டிருக்கின்றது. காலாடை, மடிப்புக்களுடன் கட்டப்பட்டிருக்கின்றது.

முன்மண்டபத்தில் ஒரு பக்கச் சுவராகவுள்ள மலையில், லிங்கம் செதுக்கப்பட்டுள்ளது. இது சரிவர செதுக்கப்படவில்லை. வட்ட ஆவுடையாரின் மேல் உருண்டை வடிவ இலிங்கம் உள்ளது. கோமுகி இருக்கிறது. இது, குடைவரைக் கோயிலாக உருவாக்கு வதற்கு உரிய முயற்சியின் தொடக்கம் என அறியலாம்.

வடக்குத் திருச்சுற்றில் காணப்படும் மலையில் அடிப்புறத்தில் இரு சண்டிகேசுவரர் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. வலது கையில் மழுஆயுதத்தை ஏந்தியும், இடது கை வரத முத்திரையைக் காட்டியும் இடது காலை மடித்து வலதுகாலைத் தொங்கப் போட்டும், அமர்ந்துள்ளார். இவ்விரண்டு சிற்பங்களும் செம்மையாகச் செதுக்கப்படவில்லை.

**தெட்சிணாமூர்த்தி :**

*தெற்குத் தேவகோட்டக் கருவறையில் ஞான தெட்சிணாமூர்த்தி ஒன்று உள்ளது. இச்சிலை இசைக்கல்லால் ஆனதாகும். நான்கு கைகள் வலது பின் கையில் அக்கமாலையும், இடதுபின் கையில் காம்பும் உண்டு. முன் வலக்கை ஞானமுத்திரையையும், முன் இடக்கை அபயத்தையும் காட்டுகின்றன.*

*திருச்சுற்றுக்களில், பரிவார தேவதைகளின் சிற்பங்கள் பல காணப்படுகின்றன. சூரியன், பைரவர் திருவுருவங்கள், இரண்டு கைகளுடன் நின்ற நிலையில் வெவ்வேறு வடிவங்களில் உள்ளன. இரண்டு பெண் தெய்வங்களின் சிலைகளும் உள்ளன. இவை துவாரபாலகிகள் சிற்பமாகவோ, அம்பாள் சிற்பமாகவோ இருக்கலாம்.*

**பிரம்மன் :**

*இரண்டு கைகள் உள்ளன. மூன்று தலைகளைக் கொண்டது. ஒருகால் மடக்கியும் ஒருகால் தொங்கப் போட்டும் அமர்ந்த நிலையில் உள்ளார். இச்சிலை கருவறை தேவகோட்டத்தில் இருந்திருக்க வேண்டும். பின் ஏதோ காரணத்தால் திருச்சுற்று மாளிகைக்கு மாற்றப்பட்டிருக்கிறது.*

**சப்த கன்னியர்கள் :**

*சப்த கன்னியர்கள் சிற்பம், முதன் முதலில் பல்லவ மன்னன் இராசசிம்மன் கட்டிய, காஞ்சி கைலாசநாதர் கோயிலில்தான் காணப்படுகின்றன. 8ஆம் நூற்றாண்டைச் சார்ந்த முத்தரையர்களது குடைவரைக் கோயில்களிலும் இச்சிற்பங்கள் செதுக்கப் பட்டுள்ளன.* [9]

*சப்தகன்னியரில் முதலில் உள்ளவருக்கு மூன்று தலைகளும், நான்கு கைகளும் உள்ளன. இவற்றில் முறையே அபயம், வரதம், கத்தி, மான் போன்றவை வைத்துள்ளாள். இரண்டாவதாக இருக்கும் தெய்வத்திற்கு ஒரு தலை நான்கு கைகள் மூன்றாவதாக இருக்கும் தெய்வத்திற்கு ஒரு தலை நான்கு கைகள் அதேபோல் ஐந்தாவதாக, ஆறாவதாக இருக்கும் தெய்வங்கள் இருக்கின்றனர்.*

ஏழாவதாக இருக்கும் தெய்வத்தின் கைகளில் மட்டும் அபயம், வரதம், உடுக்கை, பாசம் என்ற நிலையில் மாற்றமுள்ளது.

மேலும், இத்திருச்சுற்று மாளிகையில், சேட்டாதேவி, விநாயகர் மற்றும் தெட்சிணாமூர்த்தி சிலைகள் இருக்கின்றன.

இத்திருக்கோயிலின் முன்னுள்ள நந்தி பழியிலி ஈஸ்வரத் திலுள்ள நந்தியை ஒத்துக் காணப்படுகிறது. முன்னிரு கால்களை மடக்கிய வண்ணம் அமர்ந்துள்ளது. திமில் பெரிதாகச் செதுக்கப்பட்டுள்ளது. கழுத்தில் கயிறுகளால் பிணைக்கப்பட்ட மணி தொங்கவிடப்பட்டுள்ளது. நெற்றியில் பூப்போன்ற அணியும் அணிந்திருக்கின்றது.

நகரீஸ்வரத்தில், எச்சிற்பங்களும் இல்லை. நந்தி சிதைந்து போய் உள்ளது.

**திருவானைக்கா ஈஸ்வரத்திலுள்ள சிற்பங்கள் :**

கருவறைத் தேவகோட்டமாக, தெற்கில் தெட்சிணாமூர்த்தியும், மேற்கில் அர்த்தநாரீசுவரரும் அமைக்கப்பட்டிருக்கின்றனர். விமானத்தேவ கோட்டத்தில் தெட்சிணாமூர்த்தியும் அம்பாளும், பிரம்மாவும், சிவனும் இருக்கின்றனர். விமானச் சிற்பங்கள் சுதைகளால் ஆனவையாகும்.

கருவறைத் தெட்சிணாமூர்த்தி சிலை, திருக்கடம்பூர் உடைய நாயனார் கோயிலில் காணப்பட்ட சிலையை விடப் பெரிதாகவும், செம்மையாகவும் உள்ளது. இத்தேவகோட்டத்திற்கென தனி மண்டபம் கட்டப்பட்டிருக்கிறது.

**அர்த்தநாரீஸ்வரர் :**

வலது பக்கம் சிவவடிவமாயும், இடது பக்கம் உமையம் பிகையாகவும் இருக்கக் கூடிய அர்த்தநாரீஸ்வர வடிவமாகும். இவ்வடித் தோற்றத்தை மணிவாசகர், தொன்மைக் கோலம் என்று கூறுவார்.

''தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்

**சூலமும் தொக்க வளையும் உடையத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்து ஊதாய் கோத்தும்பி''**

(திருவாசகம் - திருக்கோத்தும்பி)

*சிவ வடிவத்தில் சிவன் தோலாடை போட்டு இருக்கிறார் காதில் குழை அணிந்திருக்கிறார். கையில் சூலம் வைத்துள்ளார்.*

*உமை வடிவத்தில், உமையம்பிகை, துகிலாடை அணிந் திருக்கிறார். காதில் சுருள்தோடு போட்டுள்ளார். கையில் கிளி வைத்துள்ளாள்.*

**சண்டிகேசுவரர் :**

*சதுரமான பீடத்தின் மேல் உள்ள தாமரை இருக்கையில், இருந்த கோலத்தில் அமர்ந்திருக்கிறார். இரண்டு கைகளையும் கூப்பி வணங்கிக் கொண்டுள்ளார். நீண்ட தண்டுடைய மழு வலப்புறமும் சார்த்தப்பட்டிருக்கின்றது.*

**கணபதி :**

*நான்கு கைகளுடன் அமர்ந்த நிலையில் இருக்கின்றார். அவர் தமது மேற்கைகளில் அங்குசம், பாசம் ஏந்தி உள்ளார். கீழ்க்கைகளில் தந்தத்தையும், மோதகத்தையும் வைத்திருக்கிறார். இடம்புரி விநாயகராக அருள் பாலிக்கின்றார்.*

**முருகன் :**

*தலையில் கரண்ட மகுடம் சூடி நிற்கின்றார். நான்கு கைகள் மேல் கைகள் சக்திப்படையும், வச்சிரப்படையும் கொண்டுள்ளன. கீழ்க்கைகள் அபயமாகவும், வரதமாகவும் உள்ளன. இவருக்குப் பின் மயில் நிற்கின்றது.*

**பைரவர் :**

*பைரவரின் தோற்றமாவது அச்சத்தை விளைவிக்கும். பைரவரின் நான்கு கைகளில் வலப்புறத்தே உள்ள கைகளில் உடுக்கையும் திரிசூலமும், இடப்புறத்தே உள்ள கைகளில் பாம்பும், கபாலமும் இருக்கின்றன. பைரவரின் வாகனமான நாய் பின்புறம்*

நின்று கொண்டு இருக்கிறது. இது கபாலத்தை நக்கிக் கொண்டு இருப்பது போல் நிற்கிறது.

**தண்டாயுதபாணி :**

தண்டாயுதபாணி நின்ற நிலையிலுள்ளார். மொட்டை யுடனும், சிவக் கண்மணியுடனும் (உருத்திராச்சக் கொட்டை) காணப்படுகின்றார். இரண்டு கைகள். வலக்கைக் கம்பைப் பிடித்துக் கொண்டும், இடக்கை தொங்கிய நிலையிலும் இருக்கின்றார்.

**நவக்கிரகம் :**

நவக்கிரகங்களைத் திருக்கோயிலின் ஈசானிய மூலையில் (வடகிழக்கு) அமைப்பது என்பது வழக்கம். அதேபோல், இக்கோயிலிலும் சுவாமி சன்னிதிக்கு வடகிழக்குத் திசையிலேயே, நவக்கிரகங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

**சூரியன் :**

நவக்கிரகங்களில் முதன்மையானவர். இவர் தாமரை மலரைத் தரித்திருப்பார். இரண்டு கைகள் குதிரைகள் பூட்டிய தேரில் நின்று கொண்டு இருப்பார். கிழக்கு நோக்கி நடுவாக அமைந்துள்ளார்.

**சந்திரன் :**

இவருக்கு இரண்டு கைகள் வலது கையில் கதையும், இடக்கை வரதான முத்திரையுடன் இருப்பார். இவருக்கு உடலில்லை. மலராத முல்லை மொட்டுக்களிருக்கும். கிழக்குத் திசையில் காணப்படுகின்றார்.

**செவ்வாய் :**

நான்கு கைகள் வலது கை இரண்டிலும் புத்தகமும், சக்தியும் உள்ளது. இடப்புறம் உள்ள இரண்டு கைகளில் முறையே கதையும் மற்றொரு ஆயுதமும் இருக்கிறது. தென்கிழக்கு இவர் இருக்கும் இடமாகும்.

**புதன் :**

நான்கு கைகள் அவற்றில் வலதுபுறம் வரத முத்திரையும், தண்டமும், இடதுபுறம் கேடயமும், கதையும் தரித்திருக்கிறார். மேற்கு இவர் இருக்கும் இடமாகும்.

**குரு :**

இவருக்குக் கைகள் நான்கு உள்ளன. வலப்புறமுள்ள கைகளில், வரத முத்திரையும், அட்சமாலையும், இடது புறம் கமண்டலமும், தண்டமும் வைத்திருக்கின்றார். தெற்குத் திசை இவர் இருக்கும் இடமாகும்.

**சுக்கிரன் :**

இவர் இரண்டு கைகளைப் பெற்றிருக்கின்றார். ஒரு கையில் நிதியும், மற்றொரு கையில் புத்தகமும் வைத்துள்ளார். வடக்குத் திசைப் பக்கம் இருக்கின்றார்.

**சனீசுவரன் :**

சனீசுவர பகவானுக்கு நான்கு கைகள். இவர் சிறிய வடிவம் கொண்டவர். ஒரு கால் அளவு குறைவு. இடதுகால் தரையில் ஊன்றிய படியும், வலதுகால் காக்கையின் மேல் வைத்தும் காட்சி தருகின்றார். தென்மேற்குப் புறம் இருக்கின்றார்.

**இராகு, கேது :**

இராகு நான்கு கைகளுடன் காணப்படுகின்றார். கைகளில் வாள், கேடயம், கதை ஆகியன உள்ளன. ஒருகை வரதமாகவும் காணப்படுகின்றது. வடமேற்கில் இராகுவும், வடகிழக்கில் கேதுவும் காணப்படுகின்றார்கள்.

**ஓவியம்:**

சோழர் கால ஓவியங்களில் மிகவும் பழமையான நார்த்தா மலைக் குன்றிலுள்ள விசயாலய சோழீச்சுரம் கோயிலில் உள்ளவையாகும். இக்கோயிலின் அகநாழிகைச் சுவர்களிலுள்ள

காளியின் நடன ஓவியம் சிறப்புடையதாகும். இக்கோயிலின் பக்க அறைக் கூரைகளில் காந்தவர்களின் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன[10] என்பர் திரு.கோ. தங்கவேலு அவர்கள். இதே கருத்தையே திரு. சி. சிவராமமூர்த்தியும் கூறுகின்றார். [11]

''இந்திய விவரச் சுவடி'' என்ற நூலில் வடபுறச் சுவரில் எட்டுக் கைகளுடைய பைரவர் உருவமும் தென்புறத்தில் துர்க்கை உருவமும் காணப்படுகின்றன என்று கூறப்பட்டள்ளது. [12] இதே கருத்தையே திரு. எம். இராதாகிருஷ்ணபிள்ளை அவர்களும் கூறுகின்றார். [13]

திரு.கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் இக்கோயிலின் ஓவியங் களைப் பற்றிக் கூறும்பொழுது, ''விசயாலய சோழீச்சுரத்திலுள்ள வண்ண ஓவியங்களின் சிதைகவுகள் வாடிவிட்டன. அர்த்தமண்டபத்தின் வடக்குச் சுவரில் இரண்டு பெரிய ஓவியங்கள் இருக்கின்றன. இவற்றுள் ஒன்று வயிரவரின் உருவம். மற்றொன்று நடராசரின் உருவம். கடுமையான தோற்றத்தைப் பார்க்கும்பொழுது சுவரோவியக் கலை அழிந்து கொண்டிருந்த காலத்தில் இவை எழுதப்படடதாகத் தெரிகிறது. ஆனால் தெற்குச் சுவரில் உள்ள முகங்களின் அன்றலர்ந்த செந்தாமரை அழகும், பச்சிளங் குழந்தைத் தன்மையும் தஞ்சாவூர் வண்ண ஓவியத்தின் பொற்காலத்தை நினைவூட்டுகின்றன. எனவே இந்த ஓவியங்கள் பிற்காலச் சோழர்கள் காலத்தில் அதாவது 12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது 13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தீட்டப்பட்டன வாகலாம் என்று தற்காலிகமாகக் கொள்ளலாம்[14] என்று கூறுகின்றார். இவர் 'தற்காலிகம்' என்றமையால் முடிந்த முடிபாக காலத்தை வரை யறுக்கவில்லை. மு. நளினி அவர்கள் வடபுறத்தில் காணப்படும் ஓவியங்களை பைரவர் ஆடல்வல்லான் என்றே குறிப்பிடுகிறார். [15]

**ஓவியங்களின் காலம்:**

திரு. தேவகோட்டை பி. நாராயணன் அவர்கள் இவ்வோ வியங்கள் 17ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது என்பர். [16]

புதுக்கோட்டை மாநிலக் கையேடும் (1944) ''17ஆம் நூற் றாண்டிற்கு முற்படாத ஓவியங்கள்தாம் இவை'' என்று கூறுவதாக திரு. கோபாலகிருஷ்ண காந்தி தமது நூலில் கூறுகிறார்.

*இக்கோயில் ஓவியங்கள் எக்காலத்தில் எழுதப்பட்டிருக்கிறது என்பது குறித்தும் ஓவியங்கள் குறித்தும் ஆராயப்பட வேண்டும். ஓவியங்கள் சிதைந்த நிலையில் காணப்படுவதால் தெளிவான முடிவினைக் கூற இயலவில்லை.*

**தொகுப்புரை :**

1. *நார்த்தாமலையில் காணப்படும் ஆறு சிவன் கோயில்களிலும் மூலவர்கள் இலிங்கத் திருமேனியாகவே உள்ளனர்.*
2. *பிற்காலச் சிவன் கோயில்களில் காணப்படுவதைப் போல், திருவானைக்கா ஈசுவரத்திலுள்ள அகிலாண்டேஸ்வரி அம்மன் தெற்கு நோக்கி இருக்கின்றாள்.*
3. *பல்லவர் காலத் துவாரபாலகர்களைப் போலவே விசயாலய சோழீச்சுரத்தில் அமைக்கப்பட்டுள்ளது.*
4. *மகேந்திரவர்மன் பாணியில், பழியிலி ஈசுவரக் கோயிலின் முன் துவாரபாலகர்கள் வடிக்கப்பட்டுள்ளனர்.*
5. *திருக்கடம்யூர் உடைய நாயனார் கோயிலில் பரிவாரத் தெய்வங்களுக்கான கருவறை இடிந்துபோக அச்சிலைகள் திருச்சுற்று மண்டபத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன.*
6. *திருவானைக்கா ஈசுவரத்தின் கருவறைத் தேவகோட்டமாக மேற்கில் இலிங்கோத்பவர் தான் இருப்பார். ஆனால் இங்கு அர்த்தநாரீஸ்வரர் சிலை உள்ளது.*
7. *கணபதி, முருகன், பைரவர், தண்டாயுதபாணி சிலைகள் முகமண்டபத்தில் வரிசையாக இருக்கிறது. இது, கோயில் மாற்றி, மாற்றிக் கட்டப்பட்டிருக்கிறது என்பதற்குச் சான்றாக உள்ளது.*
8. *கோயிலைச் சுற்றி மதில் சுவர் உள்ளது. தெற்குப் புறமும் கிழக்குப் புறமும் வாயில்கள் உள்ளன.*

**அடிக்குறிப்புகள்:**

1. எஸ். நாராயண சுவாமி, ‘‘இலிங்கோத்பவர்’’, ப. 2.
2. கோபாலகிருஷ்ண காந்தி, இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1044.

3. கள ஆய்வின் பொழுது டாக்டர் தே. சொக்கலிங்கம் அவர்கள் கூறியது.
4. ஜே.எம். சோமசுந்தரம்பிள்ளை ''சோழற் கோயிற் பணிகள்'', ப. 20
5. கோ. தங்கவேலு, ''இந்தியக் கலை வரலாறு'', ப. 486.
6. வித்துவான் மா. சிவகுருநாத பிள்ளை, ''சிவவடிவங்கள்'', ப. 174.
7. தி. இராசமாணிக்கம், ''தமிழகக் குடைவரைக் கோயில்கள்'', சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், ப. 109.
8. மேலது, ப. 110.
9. தி. இராசமாணிக்கம், ''இந்து சமயக் கடவுள்களில் திருவுருங்கள்'', கழக வெளியீடு, திருநெல்வேலி, ப. 77.
10. கோ. தங்கவேலு, ''இந்திக் கலை வரலாறு'', ப. 56.
11. C. Sivaramamurti, South Indian Paintings, pp. 80-81.
12. கோபாலகிருஷ்ண காந்தி, இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1042.
13. எம். இராதாகிருஷ்ண பிள்ளை, ''தென்னாட்டுக் கோயில்கள்'', ப. 155.
14. பேரா. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, ''சோழர்கள்-2'', ப. 982.
15. மு. நளினி, ''வாழ்வியல் களஞ்சியம்-11'', பக். 489-90.
16. தேவகோட்டை பி. நாராயணன், ''தமிழ்நாடு சுற்றுலா'', ப. 182.



# வழிபாடும் – விழாக்களும்



**மா**னிடராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் வாழ்வில் உய்தி பெற வேண்டுமெனில் அவரவர் சமயம் சார்ந்த திருக்கோயில் வழிபாட்டை நாளெல்லாம் செய்திடல் வேண்டும் என்பர் பழ. முத்தப்பன். [1]

இச்சிறப்பினை உடைய வழிபாடு பொதுவாக நாள் வழிபாடு என்றும் சிறப்பு வழிபாடு என்றும் பிரிவுபடுகின்றன. திருவிழாக்கள் மாதவிழா, ஆண்டு விழா எனவும் நடத்தப் படுகின்றன.

**விசயாலய சோழீச்சுரம்:**

இத்திருக்கோயிலில் முற்காலத்தில், வழிபாடுகள் விழாக்கள் போன் றவை நடந்ததற்கான சான்றாகக் கல்வெட்டு ஒன்று காண்ப்படுகின்றது. அது சமண குடபோகத்திற்கு அடுத்தாற்போலக் காணப்படும் பாறையில் அமைந்துள்ளது. இது கோமாறவர்மனான திரிபுவன சக்கரவர்த்திகள் சோனாடு வழங்கிய சுந்தரபாண்டிய தேவரின் 12ஆம் ஆண்டு (கி.பி. 1228) கல்வெட்டாகும். அக்கல்வெட்டு ''இவ்வூரிலுள்ள உடையார் விசயாலய சோழிச் சுரமுடைய நாயனாருக்கு இவ்வூர் நகரத்தார்கள், திருப்படிம மாற்றுக்கும் திருவிழா நடப்பிக்கவும் திருநாளில் ஆவுடையாரை

எழுந்தருளிக்கவும், திருவீதிக் கூத்து நடத்தி வைக்கவும் செய்ய நிவந்தத்தைக் குறிப்பிடுகின்றது.[2]

இக்கோயில் திருவிழா வைகாசி மாதத்தில் இவ்வூர் மக்களால் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. திருவிழா பத்து நாட்கள் கொண்டாடப்படும். ஒவ்வொரு நாளும் ஒரு குறிப்பிட்ட குடும்பத்தினர் விழாச் செலவினை ஏற்று நடத்தி வந்தனர். விழா பற்றிய முடிவுகளை அவ்வூர் நகர்மன்றக் குழு முடிவு செய்யும்.

விழாக் காலத்தில் கடவுள்களுக்கு எண்ணெய் அபிசேகம் செய்யப்படுவதுடன் கணேசருக்குச் சிறப்பு வழிபாடும் நடத்தப் படுகின்றன. இத்திருவிழாவின் பொழுது திருஞான சம்பந்தர், பிள்ளையார் வழிபாடும் மேற்கொள்ளப்படும்.

பூசைகள் மற்றும் வழிபாடுகளுடன் விளையாட்டுக்கள் பொழுதுபோக்கு அம்சங்கள் போன்றவையும் நிகழ்த்தப் படுகின்றன. இவற்றை ஒரு குடும்பத்தினரோ அல்லது பல குடும்பத்தினரோ சேர்ந்து இருந்து செய்வார்கள். இவ்விதமான முறைகளில் காஞ்சிராங்குடையார், நெடுவாசலுடையார், பாலுவருடையார், இருஞ்சிறையுடையார், முற்றமுடையார் என்றவர்கள் அடங்குவர்.

இக்கோயில் திருவிழாவிற்குக் கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயில் வருவாயிலிருந்து ஒரு பகுதி கொடுக்கப்பட்டதாகவும் அறிகின்றோம்.[3] இச்செய்திகள் யாவும் மிகச் சேதமடைந்த கல்வெட்டுக்கள் மூலம் தெரியவந்தவையாகும்.

இன்று இக்கோயிலில் நாள் வழிபாடோ, சிறப்பு வழிபாடோ ஏதும் நடத்தப் பெறவில்லை. திருவிழாவும் இல்லை.

**பழியின் ஈசுவரம் :**

இக்கோயிலில் நாள் வழிபாடோ, சிறப்பு வழிபாடோ ஏதும் நடத்தப் பெறவில்லை. திருவிழாவும் தற்பொழுது, இல்லை.

**ஜ்வரகரேசுவரர் சுனைக் கோயில் :**

சுனைக் கோயிலுக்குள், இறைவன் பாறையிலேயே செதுக்கப்பட்ட இலிங்க உருவாகக் காட்சி தருகின்றார். சுனை நீர்

எந்நேரமும் ஊறிக் கொண்டே இருப்பதால் இறைவனை வழிபட நீரை இறைக்க வேண்டும்.

கி.பி. 1857ஆம் ஆண்டுக் கல்வெட்டில் இராமச்சந்திர தொண்டைமான் இச்சுனைநீரை வெளியேற்றியபின் தன் இளைய ராணியுடனும் குருவாகிய சிவராமசுவாமியுடனும் கோயிலுக்கு வந்து இலிங்கத்தை வழிபட்டான் என்று கூறப்பட்டுள்ளது.[4]

'பிருந்தாவன சுவாமிகள்' ஒரு முறை இச்சுனை நீரை இறைத்து இறைவனுக்கு அபிஷேக நைவேத்தியங்கள் செய்து இரண்டு மாத காலம் பூசைகள் செய்து வழிபட்டார்.[51]

இவருக்குப் பின் சில காலம் கழித்து புதுக்கோட்டை மன்னரான 'கூத்தப்பால் கண்ணாயிரத் தொண்டைமான்' இவ்விறைவனைப் பூசை செய்து சிறப்பாக வழிபட்டார்.

ஓராண்டுகளுக்கு முன் புதுக்கோட்டை தேவஸ்தானம் இச் சுனை நீர்க்கோயிலை மக்கள் வழிபட வேண்டும் என்ற எண் ணத்தில் வழிபாட்டிற்குரிய ஏற்பாடுகளைச் செய்தது. மலை மேலிருக்கும் காரணத்தால் மக்கள் வழிபடச் செல்லவில்லை. எனவே தேவஸ்தானம் இம்முயற்சியைக் கைவிட்டது.[6]

சமீபத்தில், நீர் இறைக்கப்பட்டு, வழிபாடுகள் செய்யப் பெற்றன. தற்பொழுது இச்சுனை நீர்க் கோயிலுக்கு வழிபாடு நிகழ்த்தப் பெறவில்லை.

**திருக்கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயில்:**

பெரும்பாலான நார்த்தாமலைக் கல்வெட்டுக்கள் கடம்பூர் கோயில் மண்டபச் சுவர்களிலும் அடுத்துள்ள பாறைகளிலும் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் பதினொன்று சோழருடையது. பத்து பாண்டியருடையது. இவற்றில் நகரத்தார்கள் கோயிலுக்குத் தானமளித்த நிலம், பிறவகைத் தானங்கள், வழிபாடுகள், சந்நிதிகள், விழாக்கள் ஆகியவை நடத்துவதற்காகக் கொடுத்த அறக்கொடைகள் குறித்தும் கூறப்பட்டுள்ளன.[7] சுந்தரபாண்டியனது கல்வெட்டு அம்மன் ஆலயத்தையும் கொடி மரத்தையும் 'பழுதூர் உடையன் பெரியன்' சுட்டியதாகக் கூறுகிறது.[8]

*மேற்காணும் செய்திகளை வைத்துப் பார்க்கும் பொழுது இக்கோயிலில், முன்பு வழிபாடுகளும் திருவிழாக்களும் சிறப் பாகவே கொண்டாடப்பட்டிருக்கின்றன என்று அறிய முடிகின்றது. ஆனால், இன்று வழிபாடும் இல்லை. திருவிழாவும் இல்லை.*

## 4.5. நகரீசுவரம் :

*இக்கோயிலில் பூசையோ திருவிழாவோ இன்று நடை பெறவில்லை.*

## 4.6. திருவானைக்கா ஈசுவரம் :

*நார்த்தாமலை சிவன் கோயில்களில் இத்திருக்கோயிலில் மட்டுமே, இன்று வழிபாடும் திருவிழாவும் நன்கு நடத்தப் படுகின்றன.*

*இக்கோயிலில் நான்கு காலப் பூசை நடைபெறுகின்றது. அவையாவன :*

1. காலச் சந்தி
2. உச்சிக்காலம்
3. சாயரட்சை
4. அர்த்தசாமம்

### 1. காலச் சந்தி :

*இது காலை 8.00 மணி முதல் 9.00 மணி வரை நிகழும் பூசையாகும். இது 'காலைப் பூசை' என்று கூறப்படும். இப் பூசையின் போது சுவாமி அம்பாள் ஆகிய பிரதானமூர்த்திகளுக்கு நல்லெண்ணெய், பால், அபிஷேகம் செய்த பின்பு சூரியனிலிருந்து பூசை தொடங்கி அனைத்துப் பரிவார தெய்வங்களுக்கும் பூசை நடத்தப் பெறும்.*

### 2. உச்சிக்காலம் :

*காலை 12.00 மணியிலிருந்து 1.00 மணி வரையிலும் இப்பூசைக்கு உரிய காலமாகும். இவ்வேளையில் சுவாமி, அம்பாள்*

*மற்றும் பரிவார தெய்வங்களுக்கும் அபிஷேக, தீப, தூப நைவேத்தியங்கள் உண்டு.*

**3. சாயரட்சை :**

*இப்பூசை மாலை 5.00 மணி முதல் 6.00 மணி வரை நடைபெறும்.*

**4. அர்த்த சாமம் :**

*இரவு 8.00 மணி முதல் 8.30 மணிக்குள் நிகழ்த்தப்படும். அர்த்தசாமப் பூசையில் சுவாமி, அம்பாளுக்கு அபிடேகம் செய்து பள்ளியறையில் இருத்துவர். பின்பு சண்டிகேசுவரர், பைரவர் பூசைகளுடன் அர்த்தசாமப் பூசை நிறைவு பெறும். இப்பூசைக்குப் பின் கோயில் திருக்காப்பிடப்படும்.*

*இத்திருக்கோயிலில் பூசை முடிந்தவுடன் மேள, தாளங்களுடன் நைவேத்தியம் இக்கோயிலுடன் தொடர்புடைய மாரியம்மன் கோயிலுக்கு எடுத்துச் செல்லப்பட்டுப் பின் அக்கோயிலின் அபிடேகம், தீபாராதனை, நைவேத்தியப் பூசைகள் செய்யப் படுகின்றன.*

*புதுக்கோட்டை தேவஸ்தானத்தின் கட்டுப்பாட்டில் இரு கோயில்களும் இருப்பதால் மாரியம்மன் கோயிலில் மடைப்பள்ளி இருக்கக் கூடாது என்ற காரணத்திற்காகவும், திருவானைக்காக ஈஸ்வரத்திலேயே நைவேத்தியம் செய்யப்பட்டு மாரியம்மன் கோயிலுக்கு எடுத்துச் செல்லப்படுகின்றது.*

**நைவேத்தியம் :**

*நான்கு காலப் பூசைகளிலும் இங்கு தினப்படி சுத்தஅன்னமே நைவேத்தியமாகப் படைக்கப் பெறுகின்றது. விசேச நட்களில் சர்க்கரைப் பொங்கல், புளியஞ் சாதம் போன்றவையும் படைக்கப் பெறுகின்றன.*

**திருவிழாக்கள் :**

*கோயிலோடு இணைந்த விழாக்கள், நிகழ்ச்சிகள் எல்லாம் மக்கள் தொடர்பு சாதனமாகவும் மக்களிடம் இறைப் பற்றை*

வளர்க்கும் வண்ணமாகவும் அமைந்துள்ளன. திருவிழாக்கள் எல்லாக் கோயில்களிலும் நடத்தப் பெறுகின்றன. இக்காலத்தில் கோயிலுக்குப் போகாதவர்களும் கூட. திருவிழா அன்று கோயிலுக்குச் செல்வதுண்டு. இந்த விழாக்களில் உற்சவ மூர்த்தியை அழகாக அலங்காரம் செய்து மேள தாளத்துடன் வீதிகளில் ஊர்வலமாக எடுத்து வருவர். இது மக்கள் வீட்டில் இருந்தபடியே வணங்குவதற்குத் திருவிழாக்கள் ஒரு வாய்ப்பாக அமைகின்றன.

**திருக்கார்த்திகை :**

திருக்கார்த்திகைத் திருவிழாவை கார்த்திகைச் சோமவாரம் என்பர். இந்நாளன்று முருகன் - சுவாமி - அம்பாள் ஆகியோர்க்கு சிறப்பு அபிடேகம் செய்து நைவேத்தியம் படைத்து தீப ஆராதனைகள் எல்லாம் நடத்தி வழிபாடானது நடத்தப்படும். முருகனைப் பஞ்சமூர்த்திகளுடன் எழுந்தருளச் செய்து உலா வரச் செய்வர். இத்திருவிழா இக்கோயிலில் சிறப்பாக நடைபெறுகின்றது.

**திருவாதிரை :**

இக்கோயிலில் திருவாதிரைத் திருவிழா நன்கு கொண் டாடப்படுகின்றது. இது மார்க்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் நடைபெறக் கூடிய ஒரு உற்சவமாகும். இதனை ''ஊடல் உற்சவம்'' என்பர். இத்திருவிழா பத்து நாட்கள் தொடர்ந்து நடத்தப் பெறும். ஒவ்வொரு நாளும் சிறப்புப் பூசைகளுடன் மாணிக்கவாசகர், விநாயகர், முருகன், சுவாமி, அம்பாள் ஆகியோர் கேடயத்தில் உலா வருவர். பத்தாம் நாள் அன்று ஊர்க்காரர்கள் அனைவரும் சேர்ந்து கொண்டாடுவர்.

**மகா சிவராத்திரி :**

மகா சிவராத்திரி மாசி மாதம் கொண்டாடப்படும். நான்கு காலப் பூசையுடன் சிறப்பு வழிபாடும் நடத்தப்படுகின்றது.

**பிடாரி கோயில் திருவிழா :**

திருவானைக்கா ஈசுவரத் திருக்கோயிலுக்குச் சிறிது தூரத்தில் ஆகாச ஊரணிக்குக் கிழக்காக அமைந்திருக்கும் கோயில் பிடாரி

கோயிலாகும். இக்கோயில் திருவிழா மாசி மாதம் பத்து நாட்கள் கொண்டாடப்படுகின்றது. பிடாரித் தெய்வமானது இத்திருவிழாக் காலத்தில், திருவானைக்காக ஈசுவரக் கோயிலுக்குக் கொண்டு வரப்பட்டு விழா நடத்தப்படுகின்றது. பத்து நாட்களும் பிடாரித் தெய்வம் திருவீதி உலா வரும். பத்தாம் நாளன்று ஊர் மக்கள் அனைவரும் கூடிப் பொது நிகழ்ச்சிகள் நடத்திச் சிறப்பிப்பர்.

## தொகுப்புரை :

1. விசயாலய சோழிச்சுரத்தில் 13ஆம் நூற்றாண்டில் திருவிழா நடந்ததற்கான சான்றாக சுந்தர பாண்டியன் கல்வெட்டு ஒன்று காணப்படுகின்றது. இதன் மூலம் இக்கோயிலில் வழிபாடு, திருவிழா போன்றவை நடந்ததை அறிகின்றோம். திருவிழா வைகாசி மாதம் நடத்தப்பட்டிருக்கிறது. இதை ஊர் மக்களில் குறிப்பிடடவர்கள் நடத்தியுள்ளனர். இன்று பூசை, வழிபாடு இல்லை.
2. ஜ்வரகரேஸ்வரர் சுனைக் கோயிலில் இராமச்சந்திர தொண்டைமான் கி.பி. 1847ல் நீர் இறைத்து இறைவனை வழிபட்டார்.
3. பழியிலி ஈசுவரம், நகரீசுவரம் ஆகிய கோயில்களில் வழிபாடு இல்லை.
4. திருக்கடம்பூர் உடைய நாயனார் திருக்கோயிலில் விழா நடந்த செய்தி சிதைந்த கல்வெட்டுக்கள் மூலம் தெரிய வருகிறது.
5. திருவானைக்கா ஈசுவரத்தில் நான்கு காலப் பூசை நடக்கிறது. திருக்கார்த்திகை, திருவாதிரை, மகா சிவராத்திரி என்ற விழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.

## அடிக்குறிப்புகள்:

1. டாக்டர் பழ. முத்தப்பன், ''திருக்கோயில் வழிபாட்டு விதிகளும் பஞ்சபுராணப் பாடல்களும்'', ப. 1, மீனாட்சி நூலகம், சன்னதித் தெரு, மயிலம்.
2. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியன், ''சோழர் கலைப்பாணி'', ப. 43.

3. **Tonwship studies, "Nagarattar Malai", P. 15.**
4. இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1044.
5. கள ஆய்வின் போது திரு. மு. தங்கவேலு அவர்கள் கூறியது.
6. கள ஆய்வின் போது திரு. மு. தங்கவேலு அவர்கள் கூறியது.
7. இந்திய விவரச் சுவடி, புதுக்கோட்டை மாவட்டம், ப. 1045.
8. எம். இராதாகிருஷ்ண பிள்ளை, ‘‘தென்னாட்டுக் கோயில்கள்’’, அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை. பக். 155 - 156.





# திருக்கோயில்களில் நிருவாகம்

**நா**ர்த்தா மலையில் காணப்படும் சிவன் கோயில்களில் ஐந்தை, இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையினரும் ஒரு கோயிலைப் புதுக்கோட்டைத் தேவஸ்தானமும் நிருவகித்து வருகின்றன.

**இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையின் நிருவாகம்:**

விசயாலய சோழீச்சுரம் - பழியிலி ஈசுவரம், ஜ்வரகரேசுவரர், திருக்கடம்ப உடைய நாயனார் திருக்கோயில், நகரீசுவரம் என்ற ஐந்து கோயில்கள் இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் பாதுகாக்கப்பட்டு நிருவாகம் செய்யப்படுகின்றன.

சென்னை அலுவலகத்தின் கட்டுப்பாட்டில் புதுக்கோட்டையில் இத்துறை அலுவலகம் செயல்படுகின்றது. இது இப்பகுதியில் காணப்படும் தொல்பொருள் கோயில்கள் பலவற்றை நிருவாகம் செய்து வருகின்றது. அவற்றில் நார்த்தாமலைக் கோயில்களும் அடங்கும்.

இந்த அலவலகத்தில் ‘பாதுகாப்பு அலுவலர்’, தொழில் நுட்ப அலுவலர் என்ற இரு அதிகாரிகள் பணியாற்றுகின்றனர். இவர்களுக்குக் கீழ் உதவியாளராகப் பலர் இருக்கின்றனர். இவர்கள் இத்துறையின் கீழ் உள்ள கோயில்களை முழு நேரமும் தங்கள் பாதுகாப்பில் சுத்தமாக வைத்திருக்கின்றனர்.

### நிருவாக எல்லை :

விஜயாலய சோழீச்சுரம், பழியிலி ஈசுவரம் ஜ்வரகரேஸ்வரர் சுனைக் கோயில் ஆகிய கோயில்களைக் கொண்ட இரண்டு ஏக்கர் நிலப்பரப்பு இத்துறை நிருவாகத்தில் மேல்மலையில் உள்ளன.

கடம்ப மலையில், காணப்படும் திருக்கடம்ப உடைய நாயனார் திருக்கோயில் நகரீஸ்வரம் ஆகிய கோயில்களைக் கொண்ட இரண்டு ஏக்கர் நிலப்பரப்பும் உள்ளன.

### நிர்வாக வேலைகள் :

திருக்கோயில்களில் ஏதேனும் சிதைவு ஏற்பட்டால் அச் சிதைவுகளைப் பழுது பார்ப்பதற்கு முன்கூட்டிய படம் வரைந்தும் சிலைகள் மற்றும் கோயில் உறுப்புகளுக்கு எண் போட்டும் குறித்துக் கொள்ளப்படும். பிறகு சிதைந்த இடத்திற்குத் தக அதே பொருளில் (கிரானைட், ப்ளூமெட்டல், ஒயிட் சேல்ட்) முன்பிருந்படியே செய்யப்படுகின்றன. இவ்விதமாகச் செய்யப்படும் பொழுது சென்னை அலுவலகத்தின் அனுமதி பெற்ற பின்னரே திருப்பணிகள் செய்யப்படும். பழையது சிறிதும் மாறாதும் அதே நேரத்தில் உறுதிப்படவும் கட்டுவர். இவை 'தொல்பொருள் பொறியியல் வல்லுநர்' மேற்பார்வையில் நடைபெறும்.

ஓவியங்கள் சிதைந்த நிலையில் இருக்குமானால் சென்னை அலுவலகத்திற்கு எழுதி அனுப்புவர். அங்கிருந்து தொல்பொருள் வேதியல் அறிஞர் வந்து பார்வையிட்டு அவ்வோவியத்தைப் பாதுகாக்கும் பணியில் ஈடுபடுவர்.

### ஓவியங்களைப் பாதுகாக்கும் முறை :

முதலில் பாதுகாப்பு நடவடிக்கை மேற்கொள்வதற்கு முன், முழு விவரத்தையும் வரைந்து வைத்துக் கொள்வர். புகைப்படமும் எடுப்பர். இதன் பின், இவ்வோவியங்கள் தீட்டப் பயன்படுத்திய பொருள்கள் பற்றியும், காலத்தையும், இடம் பற்றிய குறிப்புக் களையும் எழுதிக் கொள்வர்.

ஓவியம் அழிந்து போனதற்கான காரணமென்ன என்றும் ஆய்வர், குகைகளில் காணப்படும் ஓவியங்களின் மீது ''பாலி வினையல் அமிலம்'' அல்லது பாலிமர் அமிலம் எனப்படும் பி.வி.சி. மேற்பூச்சு செய்து பாதுகாக்கின்றனர்.

ஓவியம், எந்த வகையான வண்ணங்கள் கொண்டு தீட்டப் பட்டுள்ளன என அறிய ''காலிரி மீட்டர்'' என்ற கருவி பயன்படுத் தப்படுகிறது. ஓவியங்களைப் பாதுகாக்க சப்பானிலிருந்து தருவிக் கப்பட்ட மல்பேரி மரப்பட்டைகளையும், பஞ்சினையும் சிறிய பகுதிகளாக்கி விரிசல் அடைந்துள்ள சுவர்களின் இடையில் நிரப்புவர். அதிக விரிசல் உள்ள இடங்களில் 'அக்கொர்லிக் பிசின் களை' ஊசி மூலம் செலுத்திப் பாதுகாக்கின்றனர். உதிர்ந்துபோன ஓவியங்களை 'இபோக்கி பிசின்' மூலம் சரிசெய்கின்றனர்.

கோயில்களில், திருப்பணி செய்கின்றபொழுது இதுவரை கண்டெடுக்கப்படாத கல்வெட்டக்கள் கிடைத்தால், 'கல்வெட்டுக் கலை' வல்லுநர் வந்திருந்து இக்கல்வெட்டைப் படியெடுத்துச் செல்வார்.

ஊர்த்திருவிழா காலங்களில் கோயிலின் பாதுகாப்புப் பணிக் காக கூடுதலாக, ஐந்து பேர் நியமிக்கப்படுகின்றனர். இக்கோயில் களுக்குச் சொந்தமான நிலத்தை யாரும் ஆக்கிரமிப்புச் செய்திடாமல் உதவியாளர் தினமும் கோயிலுக்குச் சென்று பார்வையிடுவார்.

**உதவியாளரின் பணி :**

இத்துறையில் அலுவலக நேரம் காலை 8.45 முதல் மாலை 5.45 வரையாகும். உதவியாளராக உள்ளவர் முழுநேரப் பணி யாளராக இருப்பர். இவருக்குத் 'திங்கள் கிழமை' வார விடுமுறை நாளாகும். இந்நாளில், வேறு ஒருவர் இக்கோயில் பாதுகாப்பில் ஈடுபடுவர்.

வெளிநாடுகளிலிருந்தும், உள் நாட்டிலிருந்தும் வரும் பார்வை யாளர்களுக்கு, உதவியாளர் கோயில்களைத் திறந்த காட்ட வேண்டும், சிலைகளைச் சுத்தமாக வைத்து இருக்க வேண்டும். விமானத்தில் செடிகள் ஏதும் வளரவிடாமல் பாதுகாக்க வேண்டும்.

*சுற்றுப்புறத்தை மிகத் தூய்மையாக வைத்திருக்க வேண்டும். இவையே உதவியாளராகப் பணிபுரிபவரின் வேலையாகும்.*

**புதுக்கோட்டை தேவஸ்தான நிருவாகம் :**

*திருவானைக்கா ஈசுவரக் கோயிலின் வளர்ச்சிக்கும், சிறப்பிற்கும் உறுதுணையாக இருப்பது புதுக்கோட்டை தேவஸ்தானம் ஆகும்.*

*இக்கோயிலில் இருபத்திமூன்று பணியாளர்கள் பணி புரிகின்றனர். இதே பணியாளர்கள்தான் நார்த்தாமலை மாரியம்மன் கோயிலிலும் பணி செய்கின்றார்கள்.*

**பணியாளர்கள் விபரம் :**

**பூசை செய்வோர் :**

*கோயிலில் நித்தியபூசை செய்பவர். நான்கு காவலும் வந்து இறைவனை நீராட்டி, பூசைகள் செய்வர்.*

**பரிசாரகர் :**

*பூசையின் பொழுது குருக்களுக்குத் துணைபுரிபவர் பரிசாரகர் எனப்படுவார் இவர் தண்ணீர் மற்றும் பூசைக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் கொண்டு வந்து உதவியாக இருப்பார்.*

**கோயிலின் மற்ற பணியாளர்கள் :**

*இக்கோயிலில் மற்ற பணியாளர்களாக, சமையல் செய்வோர் முதல் தோட்டி வரையிலானவர்கள் உள்ளனர்.*

பணி

1. *சுயம்பாகர் (சமையல்)*
2. *காவடி திருமண்டபக்காவல்*
3. *விறகு*
4. *மெய்க்காவல்*
5. *நாதஸ்வரம்*

6. மிருதங்கம்
7. நட்டுவம்
8. தாளம்
9. தவுல்

மற்றும் திருவாபதனம், அரை, ஏந்து, நவதான்யம், வைராளி, அத்யமம், வண்ணான், புல்வெட்டுதல், கட்டுதல் என்ற பணிகளிலும் பணியாளர்கள் வேலை செய்கின்றனர். மாரியம்மன் கோயிலைக் காவல் புரிபவர்களாக இருவர் உள்ளனர்.

**கோயில் வருமானம் :**

திருவானைக்காக ஈசுவரர் கோயிலுக்கு எந்தவித வருமானமும் இல்லை. நார்த்தாமலை மாரியம்மன் கோயில் வருமானத்தைக் கொண்டே, இக்கோயிலின் நிருவாகச் செலவுகள் செய்யப்படு கின்றன. திருவிழாக்கள், பூசை போன்றவையும் அக்கோயில் வருமானத்திலேயே நடக்கின்றது.

இக்கோயிலுக்கு உண்டியல் மூலமோ, நிலங்கள் மூலமோ எவ்வித வருமானமும் இல்லை.

**செலவினங்கள் :**

கோயில் பணியாளர்களுக்கான ஊதியம், பூசைப் பொருள்கள், மின்சாரக் கட்டணம், திருப்பணிச் செலவுகள் போன்ற வழிகளில் செலவீனங்கள் ஆகின்றன. திருவிழாக் காலங்களில் செலவுகள் அதிகமாகும்.

## தொகுப்புரை :

1. நார்த்தாமலையில் காணப்படும் சிவன் கோயில்களில் ஐந்தை, இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையினரும், ஒரு கோயிலைப் (திருவானைக்கா ஈசுவரம்) புதுக்கோட்டைத் தேவஸ்தானமும் நிருவகிக்கின்றன.

2. புதுக்கோட்டை தொல்பொருள் ஆய்வுத் துறை அலுவலகத்தில் 'பாதுகாப்பு அலுவலர்', 'தொழில்நுட்ப அலுவலர்' என்ற இரு அதிகாரிகள் பணியாற்றுகின்றனர். இவர்கள் நார்த்தாமலையில் காணப்படும் சிவன் கோயில்கள் நான்கை நிருவாகம் செய்கின்றனர்.

3. மேல மலையில் இரண்டு ஏக்கர் நிலமும், கடம்பர் மலையில் இரண்டு ஏக்கர் நிலமும் இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையின் நிருவாக எல்லைக்கு உட்பட்டதாகும்.

4. திருப்பணிகள் போன்றவை இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறை சென்னை அலுவலகத்தின் அனுமதியின் பின்னே செய்யப்படுகின்றன.

5. புதிய கல்வெட்டுக்களைக் கண்டெடுத்தால் ''கல்வெட்டுக் கலை வல்லுநர்'' வந்திருந்து அக்கல்வெட்டைப் படியெடுத்துச் செல்வார்.

6. திருவானைக்கா ஈசுவரம், புதுக்கோட்டை தேவஸ்தான நிருவாகத்தின் கீழ் உள்ளது. இக்கோயில் பூசை செய்வோர், பரிசாகர் உட்பட மற்ற கோயில் பணியாளர்களையும் சேர்த்து மொத்தம் 23 சிப்பந்திகள் உள்ளனர். இவர்கள் இக்கோயிலில் பணி முடிந்தவுடன், நார்த்தாமலை மாரியம்மன் கோயில் பணிக்குச் சென்றுவிடுவார்கள்.

7. கோவிலுக்குக் காணிக்கை மூலமோ, நிலம் மூலமோ, வேறு வகைகளிலோ இருந்து எவ்வித வருமானமும் இல்லை. நார்த்தாமலை மாரியம்மன் கோயில் வருமானத்தைக் கொண்டே இக்கோயில் நிருவாகம் சிறப்பாகச் செயல் படுகின்றது.



## துணை நூற்பட்டியல்


| | | |
|---|---|---|
| 1. | எஸ்.ஆர். பாலசுப்பிரமணியன் வெளியீடு (1966) | சோழர் கலைப்பாணி, பாரி நிலையம், சென்னை - 1. |
| 2. | கை.அ. புவனேசுவரி (1987) | அன்னூர் வரலாறு, புவியரசி பதிப்பகம், 25, மணியம் இராமசாமித் தேவர் வீதி, சூலூர். |
| 3. | வித்வான் மா. சிவகுருநாத பிள்ளை (1991 | ''சிவ வடிவங்கள்'' தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர். |
| 4. | வி.மி. ஞானப்பிரகாசம், க.சி. கமலையா (1978) | தமிழக நுண்கலைகள், தமிழ்ப் பண்பாட்டு மன்றம். |
| 5. | கலாநிதி கா. கைலாசநாதர் குருக்கள் | சைவத் திருக்கோயில் கிரியை நெறி தன்னாக்கம் - யாழ்பாணம் |
| 6. | நடன. காசிநாதன் (1976) | முத்தரையர், சேகர் பதிப்பகம், சென்னை - 83. |
| 7. | கோபாலகிருஷ்ண காந்தி | இந்திய விவரச் சுவடி புதுக்கோட்டை மாவட்டம். |

| | | |
|---|---|---|
| 8. | டாக்டர் தே.வெ. மகாலிங்கம் (1968) | கலைக்களஞ்சியம், தொகுதி - 10, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை. |
| 9. | டாக்டர் பழ. முத்தப்பன் (1986) | திருக்கோயில் வழிபாட்டு விதிகளும் பஞ்சபுராணப் பாடல்களும் மீனாட்சி நூலகம், சன்னிதித் தெரு, மயிலகம். |
| 10. | Michael W. Meister (1983) | Encyclopaedia of Indian Temple Architecture, American Institute of Indian Studies,Oxford University Press,Delhi. |
| 11. | இரா. நாகசாமி மா. சந்திரமூர்த்தி (1976) | ''தமிழகக் கோயிற் கலைகள்'' தொல்பொருள் ஆய்வுத் துறை வெளியீடு |
| 12. | கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி (1989) | சோழர்கள் - 1, சோழர்கள்-2, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை. |
| 13. | தேவகோட்டை பி. நாராயணன் (1989) | தமிழ்நாடு சுற்றுலா, அருணோதயம், 3, கௌடியா மடம் சாலை, இராயப்பேட்டை, சென்னை. |
| 14. | மு. நளினி, எம்.ஏ., (1991) | வாழ்வியற் களஞ்சியம்-11, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர். |
| 15. | எஸ். நாராயண சுவாமி | இலிங்கோத்பவர், திருவாவடுதுறை ஆதீனம். |
| 16. | தி. இராசமாணிக்கம் | இந்துசமயக் கடவுள்களின் திருவுருவங்கள், கழக வெளியீடு, திருநெல்வேலி. |

17. தி. இராசமாணிக்கம் (1984) — தமிழகக் குடவரைக் கோயில்கள், கழக வெளியீடு, திருநெல்வேலி.

18. டாக்டர் துளசி. இராமசாமி (1990) — தமிழகக் கலைச் செல்வங்கள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

19. எம். இராதாகிருஷ்ணபிள்ளை — தென்னாட்டுக் கோயில்கள், அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

20. ஜே.எம். சோமசுந்தரம் பிள்ளை (1962) — சோழர் கோயிற் பணிகள், 28, கொற்றவன் குடி, அண்ணாமலை நகர்.

21. K.R. Srinivasan (1985) — Temples of South India, National Book Trust India, New Delhi.

22. C. Sivaramamurti (1968) — South Indian Paintings, National Museum, New Delhi.

23. கோ. தங்கவேலு, (1976) — இந்தியக் கலை வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை.

24. N.S. Ramasamy — Township Studies

**இதழ்கள் :**

25. The Hindu, June - 8 - 1990, Page - 20.

26. ம. இராசசேகர தங்கமணி — முத்தரையர் கோயிற் பணிகள்


